# செந்தமிழ்ச் செல்வி

உள்ளுறை



சிலம்பு-௪௬] வள்ளுவர் ஆண்டு ௨௦௦௩, ஆனி (July '72) [பரல்-௧௧

## 'செந்தமிழ்ச் செல்வி'

### இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

க. பேராசிரியர், முத்து இராசாக்கண்ணனுர் அவர்கள்,
எம்.ஏ., பி.ஓ.எல்.
இயக்குநர், தமிழகவரசு தமிழ் வளர்ச்சித் துறை, சென்னை 1

உ. ,, 'சித்தாந்த கலாநிதி', உரைவேந்தர்,
ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள்;
தமிழ்ப் பேராசிரியர், தியாகராசர் கல்லூரி, மதுரை.

ங. டாக்டர் ந. சஞ்சீவி, எம், ஏ., பி.எச்டி.,
தமிழ்த்துறைத்தலைவர், சென்னைப் பல்கலைக்கழகம்.

ச. செந்தமிழ்க் கலைமணி, வித்துவான்,
பண்டித, கா. பொ. இரத்தினம் அவர்கள்,
பி.ஏ. (ஆனர்சு) (லண்டன்) எம்.ஏ., பி.ஓ.எல். (சென்னை)
கொழும்பு.

ரு. திரு. கு. பரமசிவன் அவர்கள், எம்.ஏ., டிப். லிங்.,
தமிழ் விரிவுரையாளர், அமெரிக்கன் கல்லூரி, மதுரை.

சா. திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.,
நூலகர், மறைமலையடிகள் நூல்நிலையம், சென்னை.

---

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ௪௬ | திருவள்ளுவர் ஆண்டு ௨00௩, ஆனி சூலை 1972 | பரல் ௧௧ |
|---|---|---|


## படந் தொகுத்தலிற் பட்டறிவு

(௨)

முந்தின இதழில் படந் தொகுப்பதற்கு வாய்த்த வாயில்கள், அம்மை அம்பலவாணர், திருவள்ளுவர் திருவுருவப் படங்கள் தொகுக்கப் பெற்றமை ஆகியவற்றைப் பற்றிக் கண்டோம். இவ்விதழில் சரசாங்கி நாடக நூலாசிரியர் திருவாளர் தி. இராம. சலசலோசன செட்டியார் (எம். ஏ.), தமிழ் ஆங்கில மருத்துவ அகரவரிசை (Tamil English Medical Dictionary) நூல் யாத்த திருவாளர் தி. வி. சாம்பசிவம் பிள்ளை, மேலை நாட்டிலிருந்து தமிழகத்திலே கிறித்தவ சமயத்தைப் பரப்ப வந்த தொண்டர்கள் தமிழ் மொழியைக் கற்றுத் தமிழ் இலக்கண இலக்கியங்களை ஆங்கிலத்திலே மொழி பெயர்த்தும், தமிழிலேயே இலக்கண இலக்கிய நூல்கள், ஆராய்ச்சி நூல்கள் முதலியவற்றை எழுதியுமுள்ள கிறித்தவத் தமிழ்ப் புலவர்களில் ஒருசிலர் ஆகியோர் உருவப் படங்களைப் பெருமுயற்சிசெய்து தொகுக்கப்பெற்றதன் வரலாற்றினைக் காண்போம்.



சலசலோசன செட்டியார்

1938 ஆம் ஆண்டில் மூரங்காடியிலுள்ள பழைய புத்தகக் கடையில் சரசாங்கி என்ற நாடக நூல் விலைக்குக் கிடைத்தது. அது 'சிம்பலின்' என்ற செகப்பிரியர் நாடகத்தைத் தழுவியது. 1897 ஏப்ரலில் திருஎவ்வுளூர் இராம. சலசலோசன செட்டியாரவர்களால் இயற்றப்பெற்றது. அதற்குப் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, வி. கனகசபைப் பிள்ளை, தி. த. கனகசுந்தரம் பிள்ளை, தண்டலம் பாலசுந்தர முதலியார், தோட்டக்காடு இராமகிருட்டிண பிள்ளை முதலியோர் ஆங்கிலத்திலே பாராட்டுரைகளும், கிறித்தவக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் வி. கோ. சூரியநாராயண சாத்திரியார் (பரிதிமாற் கலைஞர்), தமிழாசிரியர் சின்னசாமி பிள்ளை உதவித் தமிழாசிரியர் கோபாலாசாரியார், திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளை, கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் முதலியோர் சாற்றுக் கவிகளும் வழங்கியுள்ளனர். எனவே இந்நாடக நூல் திரும்பவும் அச்சிடப்பெறுவதற்கு ஏற்றதொரு சீரிய நூல் என உணர்ந்தேன். விவேகசிந்தாமணி என்னும் இதழில் திரு சலசலோசன செட்டியாரவர்கள் 1897 ஆம் ஆண்டிலேயே இறையடி சேர்ந்த செய்தி குறிக்கப்பெற்றிருந்தது.

என்பால் மிக்க அன்பு காட்டிவந்த நாடகப் பேராசிரியர் பம்மல் சம்பந்த முதலியாரவர்களைக் கண்டு சரசாங்கி நாடக ஆசிரியரைப்பற்றிக் கேட்டேன். அவர்கள் பேருவகையோடு "திரு சலசலோசன செட்டியார் என்னோடு மேடையில் நடித்தவர். திருமணமாகாமல் இளமையிலேயே உயிர் நீத்தவர். எந்தக் கருத்தைக் கொடுத்துப் பாடித் தரும்படி கேட்பினும் அதற்கேற்ற பாவினத்தில் அப்போதே பாடித்தரும் ஆற்றலுடையவர். 'முதலிரவு' என்ற தலைப்பில் அவர் பாடிய பாடல்களைப் படித்துக் குலுங்கக் குலுங்கச் சிரித்து மகிழ்வுற்றேன். அவர் தந்தையார் திருஎவ்வுளூர்க் கலம்பகம், திருக்கழுக்குன்றக் கலம்பகம், சீகாளத்திக் கலம்பகம், திருவிடைமருதூர்க் கலம்பகம் முதலிய கலம்பகங்களைப் பாடிய திரு இராமசாமி செட்டியார் 'வெண்பாவுக்குப் புகழேந்தி போல் கலம்பகத்துக்கு இராமசாமி எனப் போற்றுதற்குரியர்' என்று கூறி எனக்கு நாடக ஆசிரியர்பால் மிக்க ஆர்வத்தைத் தூண்டிவிட்டனர். பின்னர் சரசாங்கி நாடகத்தைக் கழக வழி அச்சிடுமாறு கூறி முன்னுரையும் வழங்கினர்.

நாடக நூலை அச்சிடுவதாயின் அதன் ஆசிரியர் உருவப் படமும் வரலாற்றுக் குறிப்புக்களும் வேண்டுமே எனக் கருதினேன். திருஎவ்வுளூர்ப் பக்கமுள்ள சேலை என்னும் சிற்றூரிலிருந்த என் பேரன்பினரும் கழக நூலாசிரியர்களில் ஒருவருமாகிய திரு சகதேவ முதலியாரவர்கட்கு எழுதித் திரு

செட்டியாரவர்களின் குடும்பத்தினரைக் கண்டு உருவப் படமும் வரலாற்றுக் குறிப்புக்களும் கேட்டு வாங்கியனுப்புமாறு வேண்டினேன். திருஎவ்வுளூர் மருத்துவ மனையின் பக்கம் திரு முதலியார் தம் நண்பர் ஒருவரிடம் திரு செட்டியாரைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தபோது அருகில் நின்ற அம்மையார் ஒருவர் தாம் திரு செட்டியாரின் தமையனாரின் மகள் என்றும், அவருடைய படமும் வரலாறும் சென்னை மண்ணடிக்கெதிரில் பிராட்வேயிலுள்ள அம்மிக்கல், ஆட்டுரல் விற்கும் திரு மகாதேவ செட்டியாரையோ அல்லது ஐயப்பச் செட்டித் தெரு, 39 ஆம் எண் வீட்டிலிருக்கும் திரு பாலசுப்பிரமணியன் செட்டியாரையோ கண்டு கேட்பின் கிடைக்கும் என்று சொன்னாராம். அதனைத் திரு முதலியார் எனக்கறிவித்தனர். உடனே திரு பாலசுப்பிரமணியன் செட்டியாரைக் கண்டு நாடக ஆசிரியர் படமும் வரலாறும் வேண்டுமெனக் கேட்டேன். முதற்கண் அவர்கள் ஏதோ முன்னேற்பட்டுள்ள குடும்பப் பகை காரணமாக என்னிடம் சரியாகப் பேசினார்களில்லை. யான் திரு செட்டியாரின் பெரும் புலமையில் ஈடுபட்டுள்ளமையினை எடுத்துச் சொன்னபின் அவருடைய படம் மயிலாப்பூரில் தம் உறவினர் வீட்டில் இருப்பதாகச் சொல்லி அதனை வாங்கிக் கொண்டுவந்து தந்தார். அவர் சொன்ன வரலாற்றுக் குறிப்புக்களையும் எழுதிக்கொண்டேன். படம் கிடைக்கப் பெற்றதும் யான் அடைந்த மகிழ்ச்சிக்கு ஓர் அளவுமுண்டோ !

உரிய வழிவகைகளில் முயலாதிருந்திருப்பின் இளமையிலேயே பெரும்புலமை பெற்று மறைந்த தமிழ்ப் பெருமகனார் ஒருவரின் உருவப்படத்தைத் தமிழகம் இழந்திருக்கும். 1951 சனவரித் திங்களில் கழகம் அச்சிட்ட சரசாங்கி என்ற நாடகநூல் சென்னைப் பல்கலைக் கழகம் பி.ஏ., பட்டத் தேர்வுக்குப் பாடமாக வைக்கப்பெற்றது.

இனித் தமிழ் ஆங்கில மருத்துவ அகர முதலியைத் தொகுத்தெழுதி அச்சிட்ட உயர்திரு தி. வி. சாம்பசிவம் பிள்ளையின் உருவப்படம் கிடைக்கப்பெற்ற செய்தி மிக்கதொரு வியப்பினைத் தருவதாகும்.

தமிழ் ஆங்கில மருத்துவ அகர முதலியின் முதற் பாகம் 1938இல் அச்சிடப்பெற்றுள்ளது. (25 × 16 செ. மீ. அளவில்) அதன்கண் அ முதல் ஔ முடியவுள்ள உயிர்வருக்கச் சொற்கள் உள்ளன. இம் முதற் பாகத்தின் முகப்பில் திரு பிள்ளையவர்கள் ஆங்கிலத்தில் எழுதியுள்ள ஆராய்ச்சி முன்னுரை

114 பக்கங்களைக் கொண்டது. அதனைத் தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் படித்து இன்புற்று நன்றி பாராட்டுங் கடப்பாடுடையவராவர். அதிலிருந்து சிற்சில பகுதிகளை எடுத்துக் கோத்து 48 பக்க அளவில் சித்த மருத்துவத் துறையினர் 1968இல் சென்னையில் நடந்த இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டிலே வெளியிட்டுள்ளனர்.



டி. வி. சாம்பசிவம் பிள்ளை

இந்நூலுக்கு லெப்டினன்ற் கர்னல் இங்க்ஸ்டன், ஐ. எம். எஸ். லெப்டினன்ற் கர்னல் மால்கப்சன், டாக்டர் இலக்குமணசாமி முதலியார், டாக்டர் மகாதேவன், டாக்டர் திருமூர்த்தி, டாக்டர் சீனிவாசமூர்த்தி, டாக்டர் சங்கரநாராயண பிள்ளை, டாக்டர் இலட்சுமிபதி முதலியோரும்; திரு சிட்னி சுமித், திரு கே. எஸ். இராமசாமி சாஸ்திரி, பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை, பேராசிரியர் அனவரதவிநாயகம் பிள்ளை, திரு. ச வையாபுரி பிள்ளை, திரு சத்தியமூர்த்தி, டாக்டர் வே. சாமிநாதையர், திரு வெ. ப. சுப்பிரமணிய முதலியார், கே. வி. அரங்கசாமி ஐயங்கார் முதலியோரும் ஆங்கிலத்தில் பாராட்டுரைகள் வழங்கியுள்ளனர்.

திரு பிள்ளை காவல் துறையில் துணையாணையராகவும் பதிப்பாசிரியருமாய் விளங்கிப் புகழ்பெற்ற திரு பவானந்தம் பிள்ளையவர்கட்கு நெருங்கிய உறவினராவர். இவரும் காவல் துறையில் சி. ஐ. டி. கண்காணிப்பாளராகப் பணியாற்றி வந்தனர். இவர் தம் மனைவியையும் தமக்குரிய ஒரே மகளையும் இழந்து தனியே வாழ்ந்து வந்தனர்.

மேலைநாட்டுக் கிறித்தவத் தமிழ்ப் புலவர் இராட்லர், ஸ்பால்டிங், வின்சுலோ ஆகியோர் இயற்றிய தமிழ் ஆங்கில அகர முதலிகளைப் பார்த்த பின்னரே தமிழ் ஆங்கில மருத்துவ அகர முதலியைத் தொகுக்க வேண்டுமென்ற எண்ணம் இவருக்குத் தோன்றியது. அங்ஙனந் தோன்றவே அதற்கு வேண்டிய தமிழ் மருத்துவ நூல்களையும் ஆங்கில மருத்துவ நூல்களையும், இயைபு நூல் (Chemistry) செடி கொடி நூல்கள் முதலியவற்றையெல்லாம் வாங்கித் தமது இல்லத்திலே நூல் நிலையம் ஒன்றை அமைத்துக்கொண்டனர்.

மேலே குறிப்பிட்ட முதற் பாகம் வெளியிட்டபின் க முதல் கௌ முடியவுள்ள உயிர்மெய்க் ககரவருக்கச் சொற்களை இரண்டாவது பாகமாக 929 முதல் 1752 பக்கங்களில் வெளியிட்டனர். இவ்விரண்டு பாகங்களும் தனித்தனிக் கட்டடஞ் செய்யப்பெற்று வெளியிடப்பெற்றன. அவற்றை வெளியிடுவதற்குத் தஞ்சையில் தமக்குச் சொந்தமாயிருந்த இரண்டு வேலி நிலங்களை விற்றுவிட்டனர். விற்றுவந்த தொகை போதாமையால் எடுத்துக்கொண்ட வேலை தடைபட்டுத் தத்தளித்துக்கொண்டிருந்த நிலை தெரிந்து சென்னை மாநில அரசு அவர்கள் குடியிருப்பதற்குச் சிந்தாதிரிப் பேட்டையில் வீடு ஒன்றை அமர்த்திக் கொடுத்துப் பொருளுதவியும் செய்ததாம். ஏறக்குறைய 3ஆவது பாகத்துக்குரிய படிவங்கள் அச்சிட்டு முடிவுபெற்ற நிலையில் திடுமென இறையடி சேர்ந்துவிட்டனராம். உடனே அரசு அவருடைய உடைமைகளையெல்லாம் எடுத்துக்கொண்டுவந்து சென்னை மாவட்ட ஆட்சியாளர் அலுவலகத்தில் ஓர் அறையில் வைத்துப் பூட்டியுள்ளனர். அதன்பின் அரசு அதைப்பற்றி அக்கறை கொள்ளவில்லை. இந்தச் செய்தி 1966 இல் எனக்குத் தெரியவந்தது. ஆட்சியாளர் அலுவலகத்திலுள்ள துணை ஆட்சியாளரைக் கண்டு திரு சாம்பசிவம் பிள்ளையினுடைய மருத்துவ அகர முதலி எந்த அளவில் அச்சிடப்பெற்றிருக்கிறதென்பதை அறிய விரும்புவதாகத் தெரிவித்தேன். அவர்கள் அறையைத் திறந்ததும் உள்ளே புக முடியாதபடி தூசி தும்பு படிந்திருந்ததும், ஒட்டடை (நூலாம்படை) படர்ந்திருந்ததும் கண்டு என்னை ஒருமணி நேரம் வெளியே இருக்குமாறு சொன்னார்கள். பின் தம் அலுவலக எழுத்தர்களையும் ஏவலர்களையும் அனுப்பித் தூசி தும்பு, ஒட்டடை முதலியவற்றை அகற்றித் துப்புரவு செய்யும்படி பணித்தனர். துப்புரவு செய்யப்பெற்றபின் உள் நுழைந்ததும் எதிரிலிருந்த ஒரு கள்ளிப்பெட்டி நிறைய வைக்கப்பெற்றிருந்த மருத்துவ நூல்கள், நிகண்டுகள் முதலியன செல்லரிப்புண்டு சிதைந்த நிலையில் இருக்கக் கண்டு மனம் நொந்தேன். அதன் பக்கத்தில் இருப்புச்சட்ட அடுக்கு நிலை (Steel Rack) யில் அச்சிடப்பட்ட அகர முதலிப் படிவங்களும் கையெழுத்துப் படிகளும், முதல் இரண்டு பாகங்களில் சில படிகளும் இருந்தன. அச்சிடப்பெற்ற ஒரு படிவத்தின் இறுதியில் 2174 எண்ணுள்ள பக்கம் இருந்தது. அதிலுள்ள இறுதிச்சொல் சிராவம் என்பதே. அச்சிடப்பெற்ற படிவங்களையும் பிறவற்றையும் எடுத்து ஒழுங்குபடுத்துவதெனின் புத்தகக் கட்டடஞ் செய்பவர்கள் சிலர் வேண்டும். அரசு கட்டளை பெற்றுப் பின்னர் அதனைச் செய்துகொள்ளலா

மென்று கருதினேன். ஓர் அடுக்கில் பள்ளி இறுதித் தேர்வுச் சான்றிதழ் (S.S.L.C. Certificate) இருந்தது. அதில் திரு தி. வி. அண்ணுமலைப் பிள்ளை, அம்மாப்பேட்டை, (தஞ்சை மாவட்டம்) என்ற முகவரி காணப்பட்டது. அதைக் கொண்டு அவர் திரு சாம்பசிவம் பிள்ளையின் தம்பியாராக இருத்தல் வேண்டு மென்று ஊகித்தேன். உடனே திரு அண்ணுமலைப் பிள்ளை யவர்கட்கு "ஐயா, யான் திரு. தி. வி. சாம்பசிவம் பிள்ளை அவர் களுடைய படமும் வரலாறும் பெறுவதற்கு முயன்று வருகின்றேன். தாங்கள் அவருடைய தம்பியாராக இருத்தல் வேண்டுமென்று தெரிகிறது. படமும் வரலாறும் தருவீர் களாயின் தங்கட்கு நன்றி மிகவுடையவனுவேன்" என்று கடிதம் எழுதினேன். என் கடிதம் கிடைத்ததும் அவர்கள் வியப்புற்றுத் தாம் திரு சாம்பசிவம் பிள்ளை அவர்களின் உடன் பிறந்தார்தாம் என்றும் அண்மையில் சென்னைக்கு வரும்போது தம்மிடம் அவர்கள் படமுள்ள ஆள் அடையாள அட்டை (Identification Card) யினை எடுத்து வருவதாகவும் விடை எழுதினுர்கள். அக்கடிதம் கிடைத்ததும் யான் பெற்ற மகிழ்ச்சிக்கு ஓரளவில்லை. அவர்கள் எழுதியபடி படத்தைக் கொண்டுவந்து தந்தார்கள். வரலாற்றுக் குறிப்புக்களை அவர்கள் சொல்லச் சொல்ல எழுதிக்கொண்டேன்.

இப்போது மாவட்ட ஆட்சியாளர் அலுவலகத்திலிருந்த தமிழ் ஆங்கில மருத்துவ அகர முதலிப் படிவங்களும் பிறவும் அண்ணு நகரிலுள்ள அண்ணு மருத்துவமனைக்கு எடுத்துச் செல்லப்பெற்றுள்ளன என்று கேள்விப்படுகின்றேன்.

சித்த மருத்துவர்களைக் கொண்டு திரு பிள்ளையவர்கள் அரைகுறையாக விட்ட அகரமுதலி நூலை முடிப்பதற்கு அரசு விரைந்து ஏற்பாடு செய்தல் வேண்டுவது முதன்மையான கடமையாகும்.

தலைமுறை தலைமுறைக்கும் நீடுபயன்தரக்கூடிய செய்தற் கரிய பெரிய தொண்டில் ஈடுபட்டுத் தமது சொத்தையெல்லாம் அத் தொண்டுக்கே செலவிட்டு அரசு அரவணைப்பில் இருக்க வேண்டிய துன்ப நிலை எய்திப் புகழுடம்பை விட்டுச் சென்ற பெருமகனுரை மறக்கலாமா? அவருக்கன்றோ சிலை எடுக்க வேண்டும்? சித்த மருத்துவ மனைக்கு அவர் பெயரையன்றோ சூட்டுதல் வேண்டும்? சென்னையில் அவர் மறைந்த சிந்தா திரிப்பேட்டைக்கு அவர் பெயரை இடுதலும் வேண்டும்.

அவருடைய படம் கிடைப்பதற்கு வாய்ப்பளித்தருளிய திருவருளை நினைந்து நினைந்து வணங்குகின்றேன். இத்

தகைய பெருமகனரின் திருவுருவப்படம் சித்த மருத்துவ மனைகளிலெல்லாம் காட்சியளிக்கப் பெறுதல் வேண்டும்.

மருத்துவ அகர முதலியில் நோய்கள், மருந்துப் பொருள்கள், நோய் தீர்க்கும் முறைகள் ஆகியவற்றின் பெயர்களுக்கெல்லாம் தமிழிலும் ஆங்கிலத்திலும் விளக்கம் கொடுக்கப் பெற்றிருக் கிறது. ஒற்றிடம், ஒற்றைச் செம்பரத்தம் பூ. ஒற்றைத் தலைவலி ஆகிய சொற்கட்குரிய விளக்கங்களைமட்டும் கீழே காண்க.

ஒற்றிடம், மணல், சாம்பல், தவிடு. இலை அல்லது தழை முதலானவைகளை வறுத்து நோய் அல்லது வீக்கமுள்ள விடங்களில் ஒற்றுதல், a treatment by warm applications such as heated sand, ashes, bran, herbs or herbaceous leaves etc., to the painful or other affected parts—Hot fomentation.

NOTE: Fomentation is a warm or even moist application to a part of the body, for the purpose of relieving pain, relaxing muscles, relieving spasms, gripings, head-aches etc.

ஒற்றைச் செம்பரத்தம் பூ, செம்பரத்தம் பூ, ordinary shoe-flower — Hibiscus rosasinensis. It is opposed to இரட்டைச் செம்பரத்தம் பூ, red double shoe-flower.

ஒற்றைத் தலைவலி, முகத்தின் ஒரு பக்கத்தில் புருவத்திற்கும், நெற்றிக்கும் போகும் நரம்புகள் கோளாறடைவதனு லேற்படும் தலைநோய். இது 15 நாளைக்கு அல்லது மாதத்திற்கொருதரம் அதிகரித் துத் தானே குணப்படும். எப்பாகத்திலதிகரிக் கிறதோ அப்பாகத்துக் கண்ணுவது கெடும் அல்லது காதாவது செவிடாகும், pain or aching on one side of the head due to the affection of one side of the facial nerves passing through the eye brow or the forehead. There may be an attack once in a fortnight or a month, when it will increase and subside of its own accord.

The eye or the ear on the side in question will be impaired or otherwise affected—Hemicrania. See ஒருத்தலை வாதம்.

1862 இல் சென்னை, பிராட்வேயிலிருந்த அமெரிக்கன் மிஷன் அச்சகத்தில் தமிழ் ஆங்கில அகரமுதலியை அச்சிட்டு வெளிப்படுத்திய டாக்டர் மிரான் வின்சுலோ அவர்கள் உருவப்படம் கிடைக்கப்பெற்றதன் வரலாறு :

1789இல் அமெரிக்காவில் பிறந்த இவருக்கு அயல்நாடு களில் கிறித்தவ சமயத் தொண்டு புரிதல் வேண்டுமென்ற அவாக்கொண்டு 1815இல் இறையியற் கல்லூரியிற் சேர்ந்து பயிற்சி பெற்று அமெரிக்கத் திருச்சபையின் சார்பில் இலங்கைக்குச் சென்ருர். யாழ்ப்பாணத்திலே தங்கிச் சமயப் பணி ஆற்றி வந்தார். 1824ஆம் ஆண்டில் அவர்தம் துணைவியார் உடுவில் நிறுவிய மகளிர் பள்ளி இன்றுவரை சிறப்பாக நடைபெற்று வருகின்றது. 1833இல் அவர்தம் மனைவியார் உயிர் நீத்தபின் மதுரையில் அமெரிக்கத் திருச்சபையின் கிளை நிறுவப்பட்டது. பின்னர் தம் இரண்டாம் மனைவியுடன் மீண்டும் இலங்கைக்குச் சென்று சிறிது காலமே தங்கினர். அதன்பின் அவரும் திரு ஸ்கடர் ஐயரும் சென்னை நகருக்கு வந்து அங்கே அமெரிக்கக் கிளைச் சபையை நிறுவிய தோடு பெரிய அச்சகம் ஒன்றையும், சபையின் சார்பில் பள்ளி ஒன்றையும் நிறுவி நடத்தி வந்தனர்.



டாக்டர் வின்சுலோ

அவர் சமயப் பணியில் தமது பெரும்பாலான நேரத்தைச் செலவிட்டாலும் தமிழ்ப்பணியிலும் அவருக்கு மிகுந்த நாட்டம் ஏற்பட்டது. தமிழ் இலக்கியம் கிரேக்க இலக்கியத்தைவிடத் திருத்தமும் நுண்மையும் உடையது என்றும் தமிழ்மொழி பிறமொழிகட்குக் கடன் வழங்கியதேயன்றிப் பிறமொழிகளி னின்றும் கடன் பெருமல் தனித்து விளங்கும் உயர்தனிச் செம்மொழி என்றும். அதன் பெயரே இனிமையைத் தெரிவிக்கின்றது என்றும் போற்றினர்.

1799 இல் வெளியிடப்பெற்ற பெப்ரீஷியசு தமிழ் ஆங்கில அகரவரிசை, அதன்பின் வெளியிடப்பெற்ற பர்ராட்லர் தமிழ் ஆங்கில அகரவரிசை ஆகியவற்றை விட மிகவும் விரிவான

தமிழ் ஆங்கில அகரவரிசை நூலொன்றைத் தொகுத்து வெளியிட வேண்டுமென்று விரும்பினர்.

ராட்லரின் அகரவரிசை நூல் வெளிவருவதற்கு முன்னரே யாழ்ப்பாணத்திலிருந்த தவத்திரு ஜே நைட் என்பவரால் பெர்சிவல் ஐயர் துணை கொண்டு தொகுக்கப் பெற்ற தமிழ் ஆங்கில அகரவரிசை, ஆங்கிலம் தமிழ் அகரவரிசை, தொகை அகரவரிசை ஆகிய மூன்றும் அச்சிடப்பெருமல் இருந்தன. அவர் உடல்நலங்குன்றிப் பின்னர் இறையடி சேரவே அவரால் தொகுத்து வைக்கப்பெற்ற கையெழுத்துப்படி அமெரிக்கத் திருச்சபையிற் சேர்க்கப் பெற்றது. அக் கையெழுத்துப்படியும் டாக்டர் வின்சுலோ கைக்கு வரப்பெற்றது. வீரமாமுனிவர் சதுரகராதியினையும் தமது அகராதிக்குத் துணையாக வைத்துக் கொண்டார். தாம் மேற்கொண்ட தமிழ் ஆங்கில அகரவரிசை சிறப்பாக வெளிவருவதன்பொருட்டுச் சென்னையிலுள்ள தமிழ்ப் புலவர்களில் சிறந்து விளங்கிய விசாகப் பெருமாளையர், இராமாநுசக் கவிராயர், வீராசாமி செட்டியார் முதலியோரைத் துணையாகப் பெற்றுர். தமது அகரவரிசையில் வானநூல், சோதிடம், சமயம், தத்துவம், பழக்க வழக்கங்கள், ஆட்சித் துறை முதலியவற்றைப் பற்றிய சொற்கள், சிறப்புப் பெயர்கள் ஆகியவை யெல்லாம் இடம் பெறுதல் வேண்டுமென்று அவற்றையெல்லாம் தொகுத்தார்.

தொகுத்தபின் அச்சிடுவதற்குப் பங்கு ஒன்றுக்கு ரூ. 200/- திட்டப்படுத்தி 70 பங்குகள் சேர்ப்பதற்கு முயன்றுர். அது ஒரு பங்கு, அரைப்பங்கு என ஒரு சிலரே 11 பங்குகள் வரை எடுத்தனர். எண்ணியபடி வெற்றி பெறவில்லை. பின்னர் படி ஒன்றுக்கு ரூ. 20/- விலை வைத்து 98 பேர்களிடமிருந்து 126 படிகளுக்குரிய விலையினை முன்பணமாகப் பெற்றுர்.

சென்னை அரசு நூல் வெளிவந்தபின் 100 படிகள் மட்டும் வாங்கிக்கொள்வதாகத் தெரிவித்து விட்டது. ஒன்பது பேர் மட்டும் நன்கொடையாக ரூ. 205/- கொடுத்துதவினர். இவ்வுதவி கொண்டு மிக்க இடர்ப்பாட்டோடு 26×19 செ. மீ. அளவில் ஒவ்வொரு பக்கத்திலும் 3 பத்திகள் அமைத்து 976 பக்கங்கள் கொண்ட தமிழ் ஆங்கில அகராதியைப் பிழையொன்றுமில்லாமல் அச்சிட்டு வெளிப்படுத்திப் பெரும் புகழெய்தினர். ஒவ்வொரு படி எடுத்துக்கொள்வதாக முன் பணங் கொடுத்தவர்களில் ராபர்ட் கால்டுவெல், என்றி பவர், சென்கின்சு, சுபால்டிங், தவத்திரு சார்சண்ட் ஆகிய ஐவரும் குறிப்பிடத் தக்கவர்களாவர்.

இவ்வகர முதலி வெளிவந்து இரண்டு ஆண்டுகள் கழித்து 1864 இல் அமெரிக்காவுக்குச் செல்லும் வழியிலே நன்னம்பிக்கை முனை (Cape of Good Hope) யில் இவர் இறையடி சேர்ந்தனர்.

இவருடைய உருவப்படத்தைப் பெறுவதற்கு இருபது ஆண்டுகட்கு மேலாகப் பலபேர்கட்கு எழுதினேன். கிடைக்கப் பெறவில்லை. மற்றும் என்றி பவர், எல்லிசு, ரீனியசு, செங்கின்சு, இ. கோவர், கோசிங்டன், எட்வர்ட் சூவிட் ராபின்சன் முதலியோர் படங்களையும் தேடிப் பெற முயன்றேன். என் கெழுதகை நண்பரும் மதுரை இறையியற் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியருமான திரு வீ. ப. கா. சுந்தரம் அவர்கள் என்றி பவர் படமுள்ள வேதாகமத்தின் வரலாறு என்ற புத்தகத்தை அனுப்பி வைத்தனர். அதனைப் பார்த்தபின் மேலும் முயன்றால் வின்சுலோ படமும் கிடைத்துவிடும் என்ற அழுத்தமான நம்பிக்கை ஏற்பட்டது. எனவே மறைமலையடிகள் நூலகத்தின் நூலகரைக் கொண்டு அமெரிக்கா, லண்டன், இலங்கை, இந்தியா ஆகியவற்றிலுள்ள நூலகங்கள், வேதாகம சங்கங்கள், மிஷினரி மன்றங்கள் ஆகியவற்றிற்கும், கிறித்தவத் தமிழ்ப் புலவர்கள் சிலர்க்கும் மேலே குறிப்பிடப் பெற்றவர்களின் படங்களைப் பற்றிக் கேட்டு எழுதச் சொன்னேன். 40 இடங்கட்கு எழுதியதில் வெளிநாடுகளிலுள்ள எண்மரிடமிருந்தும், இந்தியாவிலுள்ள மூவரிடமிருந்து மட்டுமே விடை வந்தது. இலங்கையிலுள்ளவர்களில் ஒருவரிடமிருந்தும் விடை வரவில்லை. நியூ யார்க்கிலுள்ள மிஷனரி ரிசர்ச்சு சொசையற்றி தன்னிடத்திலுள்ள செஞ்சரி இன் சிலோன் (A Century in Ceylon) என்ற நூலிலுள்ள டாக்டர் வின்சுலோ படத்தை வெட்டி எடுத்து அனுப்பிவைத்து எனக்குப் பெருமகிழ்வை ஊட்டியது. பல ஆயிர ரூபா கொடுப்பினும் யான் படம் கிடைத்தபோது பெற்ற இன்பத்தைப் பெறமாட்டேன் என்பது எனது நெஞ்சறிந்த உண்மை. 'நாடிய பொருள் கைகூடும்', 'எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார், திண்ணிய ராகப் பெறின்' என்ற முதுமொழிகள் என் நினைவுக்கு வந்து எல்லையில் இன்பம் அளித்தன. ஏனைய கிறித்தவத் தமிழ்ப் புலவர் படங்களும் நாளடைவில் கிடைக்கப் பெறும் என்ற நம்பிக்கை யுடையேன்.

அடுத்த இதழில் இதுவரை கிடைக்கப் பெற்ற பிற கிறித்தவத் தமிழ்ப் புலவர் படங்களைப் பற்றி எழுதப்படும்.

—வ. சுப்பையா.

# சங்க இலக்கியத்தில் மயில்

## (The Common Peafowl)

[திரு. பி. எல். சாமி, பி.எஸ்ஸி.,]

சங்க நூல்களில் மயிலைப்பற்றிப் பல பாடல்கள் கூறுகின்றன. சங்கப் புலவர்கள் காட்டு மயிலையும் வீட்டு மயிலையும் பிரித்துக் கூறியுள்ளனர். காட்டு மயிலைப்பற்றிய செய்திகளே பல பாடல்களில் சொல்லப்பட்டுள்ளன. வீட்டில் வளர்த்த மயிலைப்பற்றியும் இரண்டு பாடல்கள் கூறியுள்ளன. காட்டு மயிலைக் கான மஞ்ஞை என்று சங்க நூல்கள் அழைக்கின்றன. இந்தப் பெயர் வழக்கு சங்க நூல்களில் வழங்கும் கானயானை, கானக்கோழி என்ற பெயர்களைப் போன்றதாகும். சங்க நூல்களில் காட்டு மயிலையும், வீட்டு மயிலையும் தவிர 'பழன மஞ்ஞை' என்றொரு மயிலையும்பற்றிக் கூறியுள்ளனர். இந்தப் பழன மஞ்ஞை ஊர்களினருகில் மக்களுடன் பழகிய மயிலென்று தெரிகின்றது. இத்தகைய பழகிய மயில்கள் குசராத்து முதலிய மாநிலங்களில் மக்கள் துன்புறுத்தாத காரணத்தால் இன்றும் வயல்களிலும், கழனிகளிலும் காணப்படுகின்றன. சங்க காலத்தில் மயில்களை உணவாக உண்ணும் பழக்கம் இல்லாமலிருந்திருக்கலாம். அதனால் வயல்களில் மயில்கள் வாழ்ந்திருக்கலாம். இந்தவகை மயில்களைப் பறவை நூலாரும் கூறியுள்ளனர். (where semiferal, found in the precincts of villages and cultivation in close association with man).

> "பழன மஞ்ஞை யுகுத்த பீலி
> கழனி யுழவர் சூட்டொடு தொகுக்கும்"
>
> —*புறம்-13*

பழன மஞ்ஞை என்ற பெயர் சங்க காலத்திலேயே வயல்களில் வாழ்ந்த மயில்களுக்கு வழங்கியிருப்பதைக் காணலாம். பழன மஞ்ஞை தானாக உதிர்த்த தோகையைக் கழனியில் வாழ்ந்த உழவர் நெல் கதிரோடு தொகுத்தனர் என்று கூறியதைக் காணலாம். வீட்டில் வழங்கும் மயிலைப்பற்றியும் புறநானூறு கூறுகின்றது.

> "இல்வழங்கு மடமயில் பிணிக்குஞ்
> சொல்வலை வேட்டுவ னாயினன் முன்னே"
>
> —*புறம்-252*

சங்க காலத்தில் வீட்டில் மயில்களை வளர்க்கும் வழக்கம் இருந்தது. இந்தப் பழகிய மயில்களைப் பாபிலோனியா

முதலிய நாடுகளுக்குக் கி. மு. சில நூற்றுண்டுகளுக்கு முன்னரே ஏற்றுமதி செய்ததை வரலாற்றுச் செய்திகள் கூறுகின்றன.

கான மஞ்ஞை எனப்பட்ட காட்டு மயில் இயற்கையில் காடுகளில் வாழ்கின்றன. மூங்கிற்காடுகளிலும் வேங்கை மரச் சூழலிலும் சங்க நூல்கள் காட்டு மயில்களைக் கூறியுள்ளன. மரம் பயில் கானத்தும் (குறுந்தொகை-249) கானுற்றின் கரையிலும் (குறுந்தொகை-244) அருவி வீழும் மலைச்சாரலிலும் (நற்றிணை-288) மயில்களைக் கண்டு சங்கப் புலவர்கள் பாடியுள்ளனர். பறவை நூலாரும் மயில்களைக் காடுகளிலும் கானுற்றங் கரையிலும் காணப்படுவதாகக் கூறியுள்ளனர்.

“ இனமயி லகவு மரம்பயில் கானத்து
நரைமுக வூகம் பார்ப்பொடு பனிப்பப்
படுமழை பொழிந்த சாரலவர் நாட்டுக் ”

—குறுந்தொகை-249

“ கலிமழை கெழீஇய கான்யாற் றிகுகரை
ஒலிநெடும் பீலி துயல்வர இயலி
ஆடுமயி லகவும் நாடன் நம்மொடு ”

—குறுந்தொகை-264

“ கழைவளர் அடுக்கத் தியலி யாடுமயில் ”

—அகம்-82

“ வரையிழி மயிலின் நல்குவனள் ஒதுங்கி ”

—அகம்-158

“ வேங்கை வீயுகு மோங்குமலைக் கட்சி
மயிலறி பறியா மன்னோ ”

—நற்றிணை-13

“ காமர் பீலி ஆய்மயிற் றோகை
வேறுவே றினத்த வரைவாழ் வருடைக்
கோடுமுற் றிளந்தகர்ப் பாடுவிறந் தியல
ஆடுகள வயிரின் இனிய ஆலிப்
பசும்புற மென்சீர் ஒசிய விசும்புகந்து
இருங்கண் ஆடமைத் தயங்க இருக்கும் ”

அகம்-378

“ ஏழில் நெடுவரைப் பாழிச் சிலம்பிற்
களிமயிற் கலாவத்து அன்ன தோளே ”

—அகம்-152

மயில்கள் மலைச்சாரலிலும் வாழ்ந்ததாகச் சங்க நூல்கள் கூறியுள்ளன. நன்னனுடைய ஏழில் மலைக்காட்டில் மயிலைக்

கண்டு கூறியுள்ளனர். காட்டு மயில்கள் இனமாகவும், கணமாகவும் வாழுமென்று சங்க நூல்கள் கூறியுள்ளன.

"இனமயில் அகவுங் கார்கொள் வியன்புனத்து"

—அகம்-334

"மயிலினம் பயிலும் மரம்பயில் கானம்"

—அகம்-344

"கருவுற்ற காயாக் கணமயிலென் றஞ்சி"

—திணைமாலை-107

"கருநனைக் காயாக் கணமயி லவிழ"

—சிறுபாணாற்றுப்படை-165

"களிறில வாகிய புல்லரை நெடுவெளிற்
கான மஞ்ஞை கணனொடு சேப்ப"

—புறம்-127

இனமயில் என்றும் கணமயில் என்றும் கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். கான மஞ்ஞை கணனொடு சேரும் என்று கூறியிருப்பதையும் கவனிக்கலாம். பறவை நூலாரும் காட்டுமயில் சிறு கூட்டமாகக் காணப்படும் என்று கூறி யுள்ளனர். ஓர் ஆண்மயிலும் மூன்றிலிருந்து ஐந்து வரை எண்ணிக்கையுடைய பெண்மயில்களும் சேர்ந்த கூட்டத்தைக் காணலாம் என்று கூறுவர். ஆண்மயிலின் நிறம், உருவம், அழகு ஆகியவை பற்றிச் சங்க நூல்கள் கூறியுள்ளன. காலடியி லிருந்து உச்சிக்கொண்டைவரை மயிலை வர்ணித்துள்ளனர். மயிலின் காலில் ஐந்து விரல்கள் உள்ளன. இந்த விரல்கள் நொச்சியின் ஐந்து பிரிவுடைய இலைபோலிருப்பதாகச் சங்க நூல்கள் கூறியுள்ளன.

"மயிலடி அன்ன மாக்குரல் நொச்சியும்"

—நற்றிணை-305

"மயிலடி யிலைய மாக்குர னொச்சி"

—குறுந்தொகை-138, நற்றிணை-115

மயிலடிக்கு நொச்சியின் இலையை உவமை கூறியது மிகப் பொருத்தமானதாகும். காட்டு நொச்சியைப் பிற்காலத்தில் 'மயிலடி' என்ற பெயராலே அழைத்ததைக் காணலாம். இந்தப் பெயர் வழக்கு சங்க நூல்களில் பயன்படுத்திய உவமையின் அடிப்படையில் வழங்கப்பட்டிருப்பதைக் காணும் போது வியப்படையாமல் இருக்க முடியாது. மலையாளத்திலும் மயிலடி என்ற பெயர் இதற்கு வழங்குகின்றது. கன்னடத்தில்

நவுலடி என்று இதே பொருளில் வழங்குவதைக் காணலாம். தமிழில் இதையே மயிலை, மயிலை நொச்சி என்றும் அழைக்கின்றனர். சங்க காலத்திலேயே இதை மயிலை என்று அழைத்தனர். ஆனால் பிற்காலத்து உரையாசிரியர்கள் மயிலையை இருவாட்சி என்றதொரு மல்லிகைப்பூவாகக்கொண்டு தவருகப் பொருள் எழுதினர். சங்க நூலில் மயிலைக்குக் கருநீலப்பூ இருப்பதாகக் கூறப்பட்டிருப்பதைக் காணும்போது வெள்ளை நிறப் பூவையுடைய மல்லிகையை மயிலை என்று கூறியது எப்படி ? மயிலை என்ற பெயர் 'மயிலடி' என்ற பெயரின் மரூஉ என்பதில் ஐயமில்லை. மயிலின் கழுத்தைக் காயா மரத்தின் பூங்கொம்பு போல இருந்ததாகக் கூறியிருப்பதைக் கவனிக்கலாம். காயாவின் பூ நீல நிறமாக இருக்கும். மயிலின் கழுத்தும் ஒளிவிடும் நீல நிறமாக இருக்கும்.

" புல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை
மென்மயி லெருத்திற் ருேன்றும் "

—குறுந்தொகை-183

" விரவுப் பொறி மஞ்ஞை வெரீஇ யரவின்
அணங்குடை யருந்தலை பைவிரிப் பவைபோற்
காயா மென்சினை தோய நீடிப்
பஃறுடுப் பெடுத்த வலங்குகுலைக் காந்தள் " —அகம்-108

" கருநனைக் காயாக் கணமயி லவிழ "

—சிறுபாணுற்றுப்படை 105

" மணிபுரை எருத்தின் மஞ்ஞை போலநின் "

—நற்றிணை 264

காயாவின் பூக்களுடன் கூடிய கொம்பை மயிலின் கழுத்திற்கு ஒப்பிட்டது பொருத்தமேயாகும். மயிலின் நீலக் கழுத்தை நீலமணிக்கு ஒப்பிட்டதையும் காணலாம். மயிலின் தலையிலிருக்கும் குடுமியைப் பற்றியும் கூறியுள்ளனர்.

" குடுமி நெற்றி நெடுமாத் தோகை
காமர் கலவம் பரப்பி யேமுறக் " —அகம். 194

" குமரி வாகைக் கோலுடை நறுவீ
மடமாத் தோகைக் குடுமியிற் ருேன்றும்
கான நீளிடைத் தானு நம்மொடு "

—குறுந்தொகை 347

" பெயலுழந்து உலறிய மணிப்பொறிக் குடுமிப் "

—நற்றிணை 357

"ஓரி முருங்கப் பீலி சாய
நன்மயில் வலைப்பட் டாங்கியாம்" —குறுந்தொகை 244

மயிலின் தலையில் இருந்த குடுமியை வாகை மரத்தின் கோலுடைய பூவிற்கு ஒப்பிட்டுக் கூறியுள்ளது மிக அழகிய உவமையாகும். இதுபோன்ற வேறோர் உவமையை இயற்கையில் காண்பதரிது. மயிலின் தலையிலும் கோல்கள் உண்டு. அதே போன்ற வாகைப் பூ கோலுடையதாக இருக்கின்றது. கோலின் நுனியில் குஞ்சம் போல் வாகைப் பூவிற்கும் மயிலிற்கும் இருப்பதையும் காணலாம். இதை 'மணிப்பொறிக் குடுமி' என்று நற்றிணை அழைக்கின்றது. மயிலின் உச்சிக் கொண்டையைச் சங்க காலத்தில் 'ஓரி' என்றழைத்ததைக் குறுந்தொகை கூறியுள்ளது. வலையில் அகப்பட்ட மயிலின் தலையில் கோல்போன்று நீண்டிருந்த இறகுக் கொண்டை ஒடிந்ததைக் குறுந்தொகை கூறியுள்ளது. மயிலின் தோகையைப் பற்றிச் சங்க நூல்கள் விளக்கமாகக் கூறியுள்ளதைக் காணலாம். மயிலின் வாலான தோகையைப் பீலி என்று சங்க நூல்கள் அழைக்கின்றன. மயிலின் தோகையை மகளிர் கூந்தலுக்கு ஒப்பிடுவது புலவர்களின் மரபாகும். மயிலின் தோகையைப் பூத்த கருவிளைச் செடிக்கு ஒப்பிட்டுக் கூறியது மிகச் சிறந்த அழகிய உவமையாகும். மயிலின் தோகை ஒளிவிடும் பச்சை நிறமானது. தோகையில் இடை இடையே கருநீலநிறப் பொறிகள் காணப்படும். கொடியாக நீண்டு படர்ந்துள்ள காக்கணங் கொடியின் பசுமை நிறத்தில் கருநீல வட்டப் பொறி போன்ற பூக்கள் பூத்திருப்பது மயிலின் தோகைக்குப் பொருத்தமான உவமையாகும். மயிலின் தோகை அழகைப் பலவாறு வருணித்துள்ளனர். 'கவின்பெறு தோகை', 'காமர் பீலி', 'அணிகிளர் கலாவம்', 'கலிமயிர்க் கலாவம்' என்றெல்லாம் மயிலின் தோகையைப் பற்றிக் கூறியுள்ளனர்.

"தண்புனக் கருவிளைக் கண்போன் மாமலர்
ஆடுமயில் பீலியின் வாடையொடு துயல்வர"
—நற்றிணை 262

"நீலப் பைம்போ துளரிப் புதல
பீலி யொண்பொறிக் கருவிளை யாட்டி."
—குறுந்தொகை 110

கருவிளையின் பூ கண்போல் இருப்பதாக நற்றிணை கூறுவதைக் காணலாம். மயிலின் பொறிகளையும் கண் என்று கூறும் வழக்கு உண்டு. நீலப் பூ இருந்த கருவிளைப் புதர் மயிலின் பீலிபோலிருந்ததாகக் குறுந்தொகை சொல்லியுள்ளது.

மயில் தோகையை விரித்தாடுவதையும், குவித்துத் தூக்கிச் செல்வதையும் சங்கப்புலவர்கள் சொல்லியுள்ளனர்.

"கலிமயிற் கலாவங் கால்குவித் தன்ன
ஒலிமென் கூந்தல் கமழ்புகை கொளீஇத்" —புறம் 146

"வான்தளி பொழிந்த காண்பின் காலை
அணிகிளர் கலாவம் ஐதுவிரிந் தியலும்
மணிபுரை எருத்தின் மஞ்ஞை போலநின்
வீபெய் கூந்தல் வீசுவளி உளர
ஏகுதி மடந்தை எல்லின்று பொழுதே" —நற்றிணை 264

"ஒலிநெடும் பீலி துயல்வர இயலி
ஆடுமயி லகவும் நாட னம்மொடு"

—குறுந்தொகை 264

"மால்வரைச் சிலம்பின் மகிழ்சிறந் தாலும்
பீலி மஞ்ஞையி னியலிக் கால"

—பெரும்பாணாற்றுப்படை 330-331

"கன்மிசை மயிலாலக் கறங்கியூர் அலர்தூற்றத்"

—கலித்தொகை 27

கலாவத்தைக் கால்குவித்தல் என்று தோகையை மயில் சுருக்குவதைப் பற்றிப் புறநானூறு குறிப்பிட்டுள்ளது. ஒலி நெடும் பீலியைப் பின்னால் தூக்கிக் கொண்டு வருவதைக் குறுந்தொகை கூறியுள்ளது. நீண்ட தோகை அடர்ந்த காட்டில் வாழும் மயிலிற்கு இடையூருக இருப்பதில்லை என்று பறவை நூலார் கூறுவர்.

மயில்கள் பாறையில் வெயில் காயும் குணமுடையன என்று சங்க நூல்கள் கூறுவதைக் காணலாம்.

"வேங்கை தந்த வெற்புஅணி நன்னாள்
பொன்னின் அன்ன பூஞ்சினை துழைஇக்
கமழ்தாது ஆடிய கவின்பெறு தோகை
பாசறை மீமிசைக் கணங்கொள்பு ஞாயிற்று
உறுகதிர் இளவெயில் உண்ணும் நாடன்"

- நற்றிணை 396

"அருவி யார்க்கும் அணங்குடை நெடுங்கோட்டு
ஞாங்கர் இளவெயில் உணீஇய ஓங்குசினைப்
பீலி மஞ்ஞை பெடையோ டாடுங்"

—நற்றிணை 288

வேங்கை மரத்தின் பூஞ்சினையில் புகுந்த மயில் மகரந்தம் தெளிக்கப்பட்ட தோகையுடன் கூட்டமாகச் சேர்ந்து பாறையின் மேல் இளவெயில் காய்ந்ததாக நற்றிணை கூறுவதைக் காணலாம். மழை பெய்தாலும் மயில்கள் நனையும் என்று பறவை நூலார் கூறுவர்.

> "சேணுறத் தோன்றுங் குன்றத்துக் கவாஅன்
> பெயலுழந்து உலறிய மணிப்பொறிக் குடுமிப்
> பீலி மஞ்ஞை ஆலுஞ் சோலை"

—நற்றிணை 357

மழை பெய்யும்போது நனைந்து தோகையை உலர்த்திய மயிலைப்பற்றி நற்றிணை கூறியுள்ளது.

மயில்கள் இரவுக் காலத்தில் மரக்கிளைகளின் உச்சியில் தூங்கும் என்பர். இரவில் இடி விழுந்தாலும் யாதாவதொரு பெரிய ஓசை கேட்டாலும் ஆண்மயில்கள் சேர்ந்து கூக்குர லிடும் என்று பறவை நூலார் கூறுவர். மற்றும் புலி முதலிய கொடிய விலங்குகளைக் கண்டால் குரலிட்டுக் குரங்குகள் போன்ற பிற விலங்குகளை எச்சரிக்கை செய்யுமென்றும் கூறுவர்.

> "வானேர் பிறங்கு மென்றூே வதனெதிர்
> கான மஞ்ஞை கடிய வேங்கும்
> ஏதில கலந்த விரண்டற்கென்" —குறுந்தொகை 194

> "பொய்யிடி அதிர்குரல் வாய்செத் தாலும்
> இனமயில் மடக்கணம் போல" —நற்றிணை 248

> "மறப்புலி யுரற வாரணங் கதற
> நனவுறு கட்சியி னன்மயி லால
> மலையுடன் வெரூஉம் மாக்கல் வெற்பன்" —அகம் 392

வானம் இடி இடிக்கும்போது அதன் எதிர் மஞ்ஞை ஏங்கிக் குரலிட்டதாகவும் இடியின் அதிர் குரல் கேட்டு மயில் கூட்டமாகக் கூவினதாகவும் குறுந்தொகையும் நற்றிணையும் கூறியுள்ளதைக் காணலாம். மறப்புலி உறுமும்போது கட்சியிலிருந்த மயில்கள் கூவினதாக அகநானூறு (392) கூறுவதையும் காணலாம். இவைகள் பறவை நூலார் கூறிய செய்திகளோடு ஒத்துள்ளதைக் காணலாம். மயில் கார் காலத்தில் கூவுவதாகக் கூறுவது சங்க நூல் மரபாகும். கார் காலத்தில் ஆடுமென்றும் கூறுவர்.

மயில்கள் 'கட்சியில்' தங்குவதாகவும் சேர்வதாகவும் சங்க நூல்கள் கூறுவதைக் காணலாம்.

"சேணோன் இழைத்த நெடுங்கால் கழுதின்
கான மஞ்ஞை கட்சி சேக்கும்" —நற்றிணை 276

"மறப்புலி யுரற வாரணங் கதற
நனவுறு கட்சியி னன்மயி லாலு
மலையுடன் வெரூஉம் மாக்கல் வெற்பன்" —அகம் 392

"மணிவரைக் கட்சி மடமயி லாலுநம்" —ஐங்குறுநூறு 250

"கட்சி மஞ்ஞையிற் சுரமுதல் சேர்ந்த" —புறம் 60

"வேங்கை வீயுகு மோங்குமலைக் கட்சி
மயிலறி பறியா மன்னோ" —நற்றிணை 13

கட்சி மஞ்ஞை, கட்சி மயில் என்று சங்க நூல்கள் கூறுவதைக் காணலாம். கான மஞ்ஞை கட்சியில் சென்று தங்கும் என்று நற்றிணை 226ஆம் பாடல் கூறுகின்றது. கட்சி என்ற சொற்குக் காடு என்று உரையாசிரியர்கள் பொருள் கூறியுள்ளனர். கூர்ந்து நோக்கினல் கட்சி என்பதற்குக் காடு என்று கூறிய பொருள் பொருத்தமற்றது என்று தெரிகின்றது. சிலப்பதிகாரம், 'கட்சியுட் காரி கடிய குரலிசைத்துக் காட்டும் போலும்' என்று வலியன் பறவை தன்னுடைய இடத்தையும் சூழலையும் பாதுகாப்பதைப் பற்றிக் கூறியுள்ளது. கட்சி என்ற சங்க கால வழக்கு விலங்குகள், பறவைகள் ஆகிய வற்றின் உரிமையிடத்தையே குறிக்கின்றது என்பதைப் பாடல்களை ஆராயும்போது தெரிகின்றது. சில விலங்குகளும் பறவைகளும் தங்களுக்கென்று உரிய இடத்தை இயற்கைச் சூழலில் அமைத்துக் கொள்கின்றன. ஒரு தெருவில் வாழும் நாய், தனக்குரிய தெருவாகக் கொண்டு மற்ற தெரு நாயை விடுவதில்லை. தன்நிலத்தில் குறுமுயல் தந்தீயினும் வலிது என்றொரு பழமொழி வழங்குகின்றது. இது போன்றே பறவை களில் ஆண் பறவைகள் தங்களுக்கு உரியதென்று ஒரு குறிப்பிட்ட பரப்புடைய இடத்தை உரிமையாக்கிக்கொண்டு தங்களிடத்தில் பிற ஆண் பறவைகளை நெருங்க விடுவதில்லை. ஆனல் பெண் பறவைகளை அவ்விடத்தில் விரும்பி அழைக்கும். ஆண் மயிலிற்கு இந்தக் குணம் உண்டு என்பதைப் பறவை நூலார் தெரிந்துள்ளனர். ஆண் மயில் பல பேடைகளோடு சேர்ந்து வாழுமாதலால் ஒவ்வோர் ஆண் மயிலும் காட்டில் தத்தமக்குரிய இடத்தைத் தேடி வகுத்துக் கொள்கின்றன. ஆண் மயில் இணை சேரும் காலத்தில் 400 விருந்து 600 அடி வரை விட்டமுள்ள வளைவான இடத்தைத் தனதாக்கிக்கொண்டு

பிற ஆண் மயில்களை வரவிடாது தடுக்கும் என்று ஓர் அறிஞர் (Zafar futceally) ஆராய்ந்து கூறியுள்ளார். இந்த இடத்தில் ஆண் மயில் ஒரு பாறையையோ, கறையான் புற்றையோ தலைமைப் பீடமாகக் கொண்டு அதில் ஆடிக் காட்டும். இதன் வழியாக இடத்திற்கு உரிமையை நிலைநாட்டுவதோடு பெண் மயில்களையும் அழைக்கும் என்று அந்த அறிஞர் கூறியுள்ளார். கூர்ந்து நோக்கினுல் சங்க நூல்களில் கூறப் படும் கட்சி என்ற சொல்வழக்கு மயில்கள் தேடி உரிமை யாக்கிக் கொள்ளும் இடத்தையே குறிக்கின்றதென்பது தெளிவாகின்றது. இத்தகைய 'கட்சியைக்' கானவன் செய்த நெடுங்கால் கட்டின பரணிலே அமைத்துக் கொண்ட மயிலைப்பற்றி நற்றிணை 278ஆம் பாடல் கூறியதைக் கவனிக்கலாம். உயரமான இடத்தில் தலைமைப் பீடந் தேடிக் கொள்வது ஆண் மயிலின் இயல்பு. கட்சி அகலமான இடத்தை உடையது என்பதை 'நனவுறு கட்சி' நன்மயில் என்று அகநானூறு கூறியுள்ளது. மலையிலும் பாறையிலும் இத்தகைய கட்சிகளை மயில்கள் அமைத்திருந்ததாகக் கூறுவதையும் கவனிக்கலாம். ஆண் மயிலைப் போல வலியனும் கட்சி பாராட்டித் தன்னுடைய கட்சியில் வரும் காக்கை, கழுகு களைக் கூட விரட்டித் துரத்தும். அதே சமயம் குருவிகள் போன்ற எளிய பறவைகளைத் தன் கட்சிக்குள் இருக்கவிட்டுக் காப்பாற்றும் என்று பறவை நூலார் கூறுவர். பிற்காலத்தில் கட்சி என்ற சொல் ஒரு கொள்கையுடையோர் ஒன்று சேர்ந்து வாழும் அமைப்பிற்குப் பெயராக அமைந்தது. கண் என்ற சொல் இடத்தைக் குறிக்கும். இச்சொல் அடிப்படையாக விலங்குகள், பறவைகள் இயற்கையில் பிடிக்கும் உரிமையிடத் திற்குக் 'கட்சி' என்ற பெயர் தோன்றிற்று. கட்சியுள் மயில் ஆடுவதாகச் சங்க நூல்கள் கூறுவதையும் கவனிக்கலாம். கட்சியென்பதற்குக் கூடு என்றும் சிலர் உரை கூறினர். ஆனுல் கூட்டைவிட விரிந்த உரிமை இடமென்றே (Territory) கட்சி யென்ற சொற்குப் பொருள் கொள்ள வேண்டும். கூட்டில் பறவைகள் சேருவது போல் கட்சியில் மயில்கள் சேருவதும் கூறப்பட்டுள்ளதைக் காணலாம். மயில்கள் ஒழுங்காகக் கூடு கட்டுவதில்லை. சில சமயங்களில் தரையைக் கிளறி முட்டை யிடும். இல்லையேல் சில சுள்ளிகளைத் தரையில் வைத்து முட்டையிடும். ஆதலால் மயில்களுக்குக் கூடுகள் இருப்ப தாகக் கூறுவதோ அதில் அவை தங்குவதாகக் கூறுவதோ தவருகும். மயில்கள் ஒழுங்காகக் கூடுகட்டுவதில்லை என்பதை உணர்ந்தே மயில் பாறையில் முட்டை யிட்டதாகக் குறுந் தொகை கூறியுள்ளது.

"கான மஞ்ஞை யறையீன் முட்டை
வெயிலாடு முசுவின் குருளை உருட்டும்
குன்ற நாடன் கேண்மை என்றும்." —குறுந்தொகை 38

கானமயில் பாறையில் இட்ட முட்டையை முசுக் குரங்கின் குட்டி பாறையில் உருட்டியதாகக் கூறியதைக் காணலாம். முசுக் குரங்கும், காட்டு மயிலும் காடுகளில் ஒரே சூழலில் காணப்படும் என்று கூறுவர். முசுக் குரங்குகள் சைவ உணவையே உட்கொள்ளுமாதலால் மயிலின் முட்டையைத் தின்னாது உருட்டின என்று கொள்ளலாம். பெண் மயில் மட்டுமே கூட்டில் முட்டையிட்டு அடை காக்கும். ஆண் மயிலிற்குத் தெரியாமல் முட்டையிட்ட இடத்தை, கூட்டைப் பெண் மயில் மறைக்கும் என்று பறவை நூலார் கூறுவர். ஆண் மயிலிற்கும் கூட்டிற்கும் தொடர்பு இல்லாமையால் 'கட்சி' என்ற சங்க நூல் வழக்கு கூட்டைக் குறிக்காது என்பது தெளிவாகின்றது.

சங்க நூல்களில் மயிலைப் பற்றி ஓர் அரிய நுண்ணிய செய்தி வருகின்றது. குறுந்தொகை 391ஆம் பாட்டில் மயிலிற்குப் 'போழ்கண்' இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது.

"கையற வந்த பையுள் மாலைப்
பூஞ்சினை யிருந்த போழ்கண் மஞ்ஞை
தாழ்நீர் நனந்தலை புலம்பக்
கூஉந் தோழி பெரும்பே தையவே" —குறுந்தொகை 391

'போழ்கண்' என்பதற்குப் போழ்ந்தாற் போன்ற கண்களை யுடைய மயில்கள் என்று உரை கூறப்பட்டுள்ளது. இந்த உரை முழுமையான விளக்கமாகத் தெரியவில்லை. போழ் என்ற சொற்குப் பிளவுபடுத்தல், ஊடுருவிச் செல்லுதல் என்ற பொருள்கள் உண்டு. மயிலின் பார்வை ஊடுருவிச் செல்லுதல் போல் இருப்பதால் 'போழ்கண்' என்று கூறப்பட்டுள்ளது. மயிலிற்குக் காட்டு விலங்குகளை ஊடுருவிப் பார்ப்பதுபோல் உற்றுப் பார்க்கும் குணம் உண்டு என்பதைப் பறவை நூலறிஞர்கள் சுட்டிக் காட்டியுள்ளனர். (Like all creatures peacocks have oddities of their own. They have the reputation of gazing with stupefaction at any object which comes within their ken and when leopards crawl upto them and finally come into view, the birds stare at them as if hypnotised and so fall an easy prey to carnivores - zafar Futceally - The Illustrated Weekly of India -

October 27, 1968). காட்டில் வாழும் மயில் மற்ற விலங்கு களையும் பொருள்களையும் முட்டாள்தனமாக முறைத்து ஊடுருவிப் பார்க்கும் குணம் உடையது என்று அறிஞர்கள் கண்டு கூறியுள்ளனர். இந்தக் குணத்தால் மயில் சிறுத்தைப் புலி போன்ற விலங்குகளுக்கு எளிதில் இரையாகின்றது. 'போழ்கண் மஞ்ஞை' என்பதின் உண்மை விளக்கம் அறிவியல் செய்தி யென்பதை உணரவேண்டும். சிறிய அடை மொழிச் சொற்களில் அரிய அறிவியல் உண்மையைக் கூறியதைப் போற்ற வேண்டும்.

மயிலிற்குக் கூர்மையான கண்ணிருப்பதால் மயிலின் பார்வையிலிருந்து மறைந்து தப்புவது எளிதன்று என்பர். காடுகளில் புலி முதலிய விலங்குகளை முதலில் காணும் பறவை மயிலென்று கூறுவர். பழமொழி நானூறு 'வெண்ணெய் மேல் வைத்து மயில் கொள்ளுமாறு' என்று கூறுகின்றது. மயில் கூர்மையான பார்வையுடையதால் மயிலை அணுகி தலையில் வெண்ணெய் வைக்க முடியாது. வெண்ணெய் உருகி மயில் கண்ணை மறைக்கு முன் மயிலையே பிடித்து விடலாம் என்பதே பழமொழியின் கருத்தாகும். பழமொழி நூல் இயற்றப்பட்ட காலத்தில் மயிலிற்கு வழங்கிய இப் பழமொழி பிற்காலத்தில் கொக்கைக் குறித்து வழங்கலாயிற்று. 'கொக்கின் தலையில் வெண்ணெய் வைத்துப் பிடிப்பது போல்' என்று இக் காலத்தில் வழங்குகின்றது. கொக்கும் கூர்த்த பார்வையுடைய பறவை என்பது தெரிந்ததே. பழமொழி நானூற்றில் 'மயில் போலுங் கள்வருடைத்து' என்றொரு பழமொழி வருகின்றது. பாம்பைத் தின்ற மயில் அடக்கமாக இருப்பது போன்ற கள்வர் என்று பொருள் கூறுவர். மயில் முதலாயினவும் மக்களுள் ஒரு சாராரும் விழித்துறங்குவதுபோல உறங்குவதாக நீலகேசி உரையாசிரியர் கூறியுள்ளார்.

மயில் நெல் முதலிய தானியங்களை விரும்பி உண்ணும் என்று பறவை நூலாசிரியர் கூறுவர். வயல்களில் விளையும் நெல், தினை முதலியவைகளை உண்டு அழிவு செய்யும் என்பர்.

> "செந்நெ லுண்ட பைந்தோட்டு மஞ்ஞை
> செறிவளை மகளி ரோப்பலிற் பறந்தெழுந்து
> துறைநணி மருதத் திறுக்கு மூரொடு" —புறம் 50

> "கொம்மையம் பசுங்காய்க் குடுமி விளைந்த
> பாக லார்கைப் பறைக்கட் பீலித்
> தோகைக் காவிற் றுளுநாட் டன்ன" —அகம் 15

" களிகால் கழீஇய பெரும்புன வரகின்
கவைக்கதி ரிரும்புறங் கதூஉ வுண்ட
குடுமி நெற்றி நெடுமாத் தோகை" —அகம் 194

" புனவன் றுடவைப் பொன்போற் சிறுதினைக்
கடியுண் கடவுட் கிட்ட செழுங்குரல்
அறியா துண்ட மஞ்ஞை யாடுமகள்
பொறியுறு வனப்பின் வெய்துற்று நடுங்கும் "

—அகம்-105

செந்நெல்லையும், தினையையும், வரகையும், பலாப்பழத்தையும் மயில் உண்டதாகச் சங்க நூல்கள் கூறியுள்ளன. மயில் கூவுவதைச் சங்க நூல்கள் 'அகவுதல்' என்று கூறுகின்றன. தெய்வம் வந்தேறிப் பாடும் மகளிரை, குறி கூறும் கட்டு விச்சியரை அகவன் மகளிர் என்று குறுந்தொகை அழைக்கின்றது. மயிலின் குரலைப்போலக் குறி சொல்லும் மகளிர் கூவினதால் 'அகவன் மகளிர்' எனப்பட்டனர். அகவற் பாட்டும் அகவன் மகளிர் பாட்டும் பாட்டின் ஓசையடிப்படையாகத் தோன்றியிருக்கலாம். படகுப் பாட்டிலிருந்து தூங்கலோசையோடு கூடிய வஞ்சிப் பாட்டுத் தோன்றியது போல அகவற் பாட்டும் தோன்றியது. மயிலின் ஒருவகை ஓசை ஐந்து, ஆறு தடவை திருப்பித் திருப்பிக் கேட்கும். இந்த ஓசை 'க-ஆன்....க-ஆன்' என்று கேட்குமென்று பறவை நூலார் கூறுவர். இந்த ஓசையின் சொல்லுருவமே அகாவு, அகவு என்பதாகும்.

மயிலின் பீலியைச் சங்க காலத்தில் சமயச் சடங்குகளுக்குப் பயன்படுத்தினர். வேலன் வெறியாட்டில் மயில் பீலியைச் சூடினன். வேலிலும், வில்லிலும், முரசிலும் மயிலிறகைச் சொருகி வைத்தல் அக்கால வழக்கம். மயிலே தெய்வமேறி ஆடும் என்ற நம்பிக்கையும் இருந்தது. மயில் பீலி தெய்வத் தன்மை வாய்ந்தது என்று கருதினர். இன்றும் இந்த நம்பிக்கை மக்களிடையே உள்ளது.

" நெய்தல் உருவின் ஐதிலங் ககலிலைத்
தொடையமை பீலிப் பொலிந்த கடிகை
மடையமை திண்சுரை மாக்காழ் வேலொடு "

" மைபடு மருங்குல் பொலிய மஞ்ஞை
ஒலிநெடும் பீலி யொண்பொறி மணித்தார்
பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டி "

—புறம்-50

மயில்கள் தாமாக உதிர்த்த பீலியைப் பிளந்து மறவர் வில்லில் சுற்றிக்கொள்வதை அகநானூறு (281) கூறியுள்ளது. முருகனுக்குரிய பறவையாக மயிலைச் சங்க நூல்கள் கூறு கின்றன. முருகனின் மயிலை 'பிணிமுகம்' என்று புறநானூறு கூறுகின்றது. முருகனது கொடியாக அகநானூறும், புறநானூறும் கூறியுள்ளன. தொல்காப்பியர் மரபியலில் சேவற் பெயர் மயிலின் ஆணிற்கு வழங்காது என்று கூறி யுள்ளார். பெண்களை மயிலிற்கு ஒப்பிடும் செய்யுள் வழக்கு தொல்காப்பியருக்கு முன்னரே இருந்ததால் பெண் தன்மை வாய்ந்ததாகக் கருதப்பட்ட மயிலிற்குச் சேவல் பெயர் வழங்கு வது மரபில்லை எனக் கருதப்பட்டது. பேராசிரியர் செவ்வேள் ஊர்ந்த மயிலாயிருந்தால் ஆணிற்குச் சேவல் என்ற பெயர் வரலாம் என்று கூறினர். பரிபாடலில், முருகனுடைய செருப்பாக, 'புரிமென் பீலிப் போழ்புனை அடையல்' கூறப் பட்டுள்ளது. தெய்வங்களுக்கும் கடவுளர்க்கும் காலிற்குச் செருப்பு முதலிய அணிகள் ஆகமங்களில் கூறப்படவில்லை. வடநாட்டிலும் சூரியனுக்கு மட்டும் சிலைகளில் காலில் செருப்பு போன்ற அணிகலனைக் காணலாம். இது பாரசீகத் தொடர் பால் ஏற்பட்டது என்பர். ஆனல் முருகன் காலிற்குச் செருப்பு கூறியது வியப்பான செய்தியாகும். பீலியை இரண்டாக வகிர்ந்து முருகனின் செருப்புக்கு வாராக அமைத்ததைப் பரிபாடல் (21 : 7) கூறியுள்ளது.

மயிலின் ஆணை 'தோகை' யென்றே அழைப்பதைச் சங்க நூல்களில் காணலாம். ஆண்மயிலைக் குறிப்பிட 'பீலி மஞ்ஞை', 'மயிற்றோகை', என்று சங்க நூல்கள் கூறுகின்றன. தொல்காப்பியர் ஆண்மயிலை 'தூவிமயில்' என்றழைப்பதைக் காணலாம். பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்கள் விவிலிய நூலில் கூறப்பட்ட 'துகி' என்ற மயிலைக் குறிக்கும் ஈப்ரு மொழிச் சொல் தமிழ்ச் சொல் அன்று என்று கூறினர். தோகை என்ற சொல் ஆகு பெயராய் வாலையுடைய மயிலைக் குறித்ததையும் கூறித் 'துகி' என்ற சொல் தமிழிலிருந்து போகவில்லை என்றார். ஆகு பெயரானதால் வேற்று மொழியில் செல்லவில்லை என்பது பொருந்தாது. சங்க காலத்திற்கு முன்னரே தோகை என்ற சொல் ஆகு பெயராகிச் சங்க காலத் தில் மயிற்கு வழங்கும் பரந்துபட்ட பெயராக மாறியுள்ளதைப் பேராசிரியர் கவனிக்கவில்லை. முற்பட்ட சங்க நூல்களில் 14 பாடல்களில் ஆண்மயிலைக் குறித்தே தோகை என்ற சொல் வந்துள்ளது. ஒன்றிரண்டு பாடல்களில்தான் ஆண்மயிலின் கலாவத்தைக் குறித்து வந்துள்ளது. ஆதலின் சங்க காலத்

திலேயே ஆண்மயிலைக் குறிப்பிட்ட அடிப்பட்ட வழக்காகத் தோகை என்ற சொல் வழங்கிற்று என்பதைக் காணும்போது இச்சொல் ஈப்ரு மொழியில் சென்றிருப்பதில் ஐயமென்ன உள்ளது? அகநானூற்றுப் பதினைந்தாம் பாடல் துளுநாட்டில் இருந்த தோகைக்கா என்ற ஊரைக் குறிப்பிட்டுள்ளது. இதுவே இன்று ஜோக் நீர்விழ்ச்சி (Jog falls) என்று கருது கின்றனர். சங்க காலத்திலேயே தோகை என்ற மயிலின் பெயரால் ஓர் ஊர் தோன்றியிருக்குமாயின் தோகை என்ற பெயரின் பரந்துபட்ட வழக்கு நன்கு விளங்கும். ஆகுபெயர் களாகத் தோன்றியவை அடிப்பட்ட பெயர்களாக மாறிப் பிற மொழிகளில் புகக் கூடாதா? சந்தனம் என்ற பெயர் சாந்து என்ற பெயரிலிருந்து தோன்றித் தொழிலாகு பெயராய்ச் சாந்தம் என்று சங்க காலத்தில் வழங்கி வடமொழியில் புக வில்லையா? வெளிநாட்டிலிருந்து சங்க காலத்திற்குச் சிறிது பிற்பட்டு நம்நாடு புகுந்த வெற்றிலைப் பயிர் ஆகு பெயரால் பெயர் பெற்று ஆங்கிலத்தில் (Betel) என்று மாறிப் புகவில்லையா? நாயின் வாலைக் குறித்து 'வலஞ் சுரித் தோகை ஞமலி' என்று அகநானூற்றில் வருகின்றது. ஞமலி என்ற சொல் நாயைக் குறித்துச் சங்க காலத்தில் வழங்கிற்று. ஆனால் அந்த சொல் நெமலி, நெவுலி என்று தெலுங்கு, கன்னட மொழிகளில் வழங்கி நாயைக் குறிப்பிடாது மயிலைக் குறிப்பதைக் காணலாம். பிற்காலத்தில் ஞமலி என்ற சொல் தமிழிலும் மயிலைக் குறித்து வழங்கியதாகத் தெரிகின்றது. திவாகர நிகண்டில் மயிலின் பெயர்களில் ஞமலி இல்லை. பிங்கலந்தையிலும் சூடாமணி யிலும் ஞமலி மயிலின் பெயராகக் காணப்படுகின்றது. திவாகர நிகண்டு எழுதப்பட்ட காலத்துக்கும் பிங்கலந்தை நிகண்டு எழுதப்பட்ட காலத்துக்கும் இடைப்பட்ட காலத்தில் தமிழில் மயிலைக் குறிக்கும் வழக்காக ஞமலி என்ற பெயர் வந்திருக்க லாம். மயில் என்ற சொல்லே ஞமலி, நெமலி என மாறிய தாக டாக்டர் எமனோ கூறியுள்ளார். மிஞிறு என்பது ஞிமிறு ஆகியது போன்றது இந்த மாற்றம் என்பார்.

தோகை என்ற சொல் மயிலின் வாலைக் குறித்ததுபோலத் துளுமொழியில் பீலி என்ற சொல்லை நாயின் வாலிற்கும் பயன் படுத்துவதைக் காணலாம். 'நாயித பீல' என்பது நாயின் வாலைக் குறிக்கின்றது. பீலி என்ற சொல்லும் பொதுவாக வாலைக் குறித்து வழங்கியிருக்கலாம். ஞமலி என்ற சொல் சங்க காலத்துத் தமிழில் நாயையும், பிற்காலத் தமிழிலும், தெலுங்கு, கன்னட மொழிகளிலும் மயிலையும் குறித்து வழங்கின தால் நாய்க்கும் மயிலிற்கும் ஏதோ ஒரு கற்பனைத் தொடர்பு

திராவிட மொழிகளில் பழங்காலத்தில் இருந்திருக்கலாம் என்று கருதலாம். பீலி என்ற சொல் பிற்காலத்தில் மயிலைக் குறித்தும் தமிழில் வழங்கியுள்ளதை நிகண்டுகள் காட்டும். நவிரம் என்ற சொல் மயிலைக் குறித்ததாக நிகண்டுகள் கூறு கின்றன. இச்சொல் ஞமலி என்ற பெயருடன் தொடர்புடைய தாக இருக்கலாம். நவிலு என்ற கன்னடச் சொல்லிற்கும் நவிரம் என்ற தமிழ்ச் சொல்லிற்கும் ஒற்றுமை காணப்படு கின்றது. நவிரம் என்ற ஒரு மலையைப் பற்றிச் சங்க நூல்களில் சொல்லப்பட்டுள்ளது. மயில் மிகுதியாக வாழ்ந்ததால் நவிரம் என்ற பெயர் வந்திருக்கலாம். கொல்லி என்ற ஆட் கொல்லிப் புலிகள் வாழ்ந்ததால் கொல்லி என்ற மலைப்பெயர் வந்துள் ளதை இது சார்பாகக் கவனிக்க வேண்டும். மயிலிறகின் அடி முள்ளிற்கு முருந்து என்ற பெயர் அகநானூற்றில் (193) கூறப்பட்டுள்ளது.

சங்க நூல்களில் மயிலை 'மாயினம்' என்று பொதுவாக அழைத்ததைக் காணலாம். பசுமையான கிளியினத்தைப் 'பாசினம்' என்று அழைத்ததைப்போல் கருநீலப் பறவை யினத்தை 'மாயினம்' என்றனர். மை, மா என்ற சொற்கள் கருமையையும் நீலத்தையும் குறிக்கும். மை நிறமுடைய பறவை மையில் என்றழைக்கப்பட்டு மயில் ஆகியிருக்கலாம். அசோகர் போன்ற பேரரசர்கள் தோன்றிய குலப் பெயரான 'மோரியர்' என்ற பெயரே 'மோர்' என்ற மயிற் பெயரடியாக வந்ததென்பர். இந்த மோர் என்ற சொல்லும் மா, மை என்ற திராவிடச் சொற்களடியே தோன்றியிருக்கலாம். மயிலைப் பறவை நூலில் (Pavo cristatus) என்று அழைப்பர்.

---

## *பாழாச்சு பாண்டித் துரைத்தனமே!

தோப்புப் பெருத்து விளைசிலம் பாழாச்சு, தொண்டரிறு
மாப்புப் பெருத்து மனநலம் பாழாச்சு, மங்கையரின்
பூப்புப் பெருத்து மலையாளம் பாழாச்சு, முப்புரிநூல்
பாப்புப் பெருத்ததால் பாழாச்சு பாண்டித் துரைத்தனமே.

(தனிப்பாடல்)

* இப்பாடல் புலவர் இரா. இளங்குமரன் வழங்கியது.

# ஆய்வுக்கோவை—ஒரு திறனுய்வு

[பேராசிரியர், ஆ. சிவலிங்கனுர், மயிலம்]

## 4. கனுத்திறம்

"கனுத்திறமும் இளங்கோ கலேத்திறமும்" என்ற தலேப்பில், திருப்பதி, திருவேங்கடவன் பல்கலேக்கழகப் பேராசிரியர், திரு. பி. சௌரிராசன் அவர்கள் எழுதியுள்ள கட்டுரை மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. அக் கட்டுரையின் முடிந்த கருத்து பின்வருவது.

"பாண்டியன் நெடுஞ்செழியனுடன் வழக்காடிய போது கண்ணகி, கோப்பெருந்தேவியின் காற்சிலம்பு பற்றிய பேச்சு வாராமலேயே முதலில் 'என் காற்சிலம்பு மணியுடையரி' என்று எடுத்த எடுப்பிலேயே திட்ட வட்டமாகக் கூறக் காரணம் தான் கண்டகனவே யாகும்; தேவந்தி யென்ற பார்ப்பனத் தோழியிடம் தான் கண்ட கனவை விவரமாகக் கூறவில்லே; ஆனுல் கோவலனுடன் மதுரைக்குச் செல்வது, அவன் சிலம்பு விற்கச் சென்று கள்வன் எனக் கொலேப்படுத்தப்படுவது, தான் அது காரணமாகப் பாண்டியனிடம் வழக்குரைப்பது, பாண்டியன் இறக்க மதுரையைத் தீக்கிரையாக்குவது, தெய்வமாவது முதலிய யாவும் கனவில் கண்டனவே. அவற்றைக் குறிப்பாகத் தேவந்தியிடம் கூறினுள்; கனவுப்படியே யாவும் நடந்தேறின; கனவையும் நிகழ்ச்சியையும் வைத்துப் பார்க்கும்போது கண்ணகி, தான் கண்ட கனவில் பாண்டியனுடன் நீண்டநேரம் வழக்கும் ஆடியிருக்கிருள் என்பதும் பெறப்படும்; அவ்வழக்கின் முடிவில் தன் காற்சிலம்பும் கோப்பெருந்தேவி காற் சிலம்பும் கொண்ட பரல்கள் முறையே மணியும் முத்தும் ஆம் என்பது தெரிவிக்கப்பட்டு, கண்ணகி வென்றிருக்க வேண்டும்; அதனுல்தான் பாண்டியனுடன் வாதிடும் போது பாண்டியன், கள்வனேக் கோறல் கடுங்கோலன்று என்று சொன்னவுடன் தொடர்பில்லாமல், வழக்கை முடிக்கக் கருதி 'என் காற்சிலம்பு மணியுடையரியே' என்ருள் கண்ணகி; கனவில் சிலம்பு பற்றிய வழக்கிணே வாதிட்டுக் காணவில்லே என்ருல் பரல் பற்றிக் கூறியிருக்க மாட்டாள் பாண்டியனிடம்."

இவ்வாறு கட்டுரையாசிரியர் எழுதியிருப்பது மிகவும் பொருத் தமே. இவர் எழுதிய கருத்தினை யேற்று எமக்குப் பட்டன மேலும் சில எழுதுகின்றேம்.

காளி போல ஊரெங்கும் அலைந்து சுற்றிப் பாண்டிய னிடம் வழக்காட வந்தபோது, "நீர்வார் கண்ணை யெம்முன் வந்தோய் யாரையோ நீ" (20 : 48, 49) எனக் கேட்ட பாண்டியனைத் "தேரா மன்னா" (20 : 50) என எடுத்த எடுப்பிலேயே அரசனைக் குற்றவாளியாக்கியதற்கும், பின் தான் யார் என்பதும், தன் கணவனைக் கொலைப்படுத்தியது முறையற்ற செயல் என்பதும் கூறிய அவளிடம் "கள்வனைக் கோறல் கடுங்கோலன்று" (20 : 64) என்ற பாண்டியனை, "நற்றிறம் படராக் கொற்கை வேந்தே" (20 : 66) என விளித் தற்கும் காரணம் கனவில் வழக்குரைத்து வென்ற நினைவே என்னலாம்.

சிலம்பின் பரல் பற்றிய விவரம் வருவதற்கு முன்னர் அது பற்றிப் பாண்டியனுக்கும் கண்ணகிக்கும் நீண்டநேர வாதம் கனவில் நிகழ்ந்திருக்க வேண்டும். அதை விவரிக்கவில்லை பாண்டியனிடம்; ஆனால் "யாரை நீ" என்ற அவனிடம், தான் பிறந்த ஊரின் சிறப்பு, தன் கணவன் குடிச்சிறப்பு, மதுரைக்கு வந்த காரணம் முதலியவற்றைக் கனவில் கண்ட வாறே விவரித்துச் சொன்னாள். இவற்றை மட்டும் விவரிப் பானேன்? பாண்டியனுடன் கோப்பெருந்தேவி இருந்ததால் அவள் கேட்க விவரமாகக் கூறுமுகத்தான் தன் உயர்வும் கோவலன் குற்றவாளியல்லன் என்பதும் புலப்படுத்தவே கூறினாள்.

கோவலன் கொலையுண்டுகிடந்த இடத்தை ஊரவர் காட்டக் கண்ட கண்ணகி அவன் உடலைத் தழுவிப் புலம்பக் கோவலன் எழுந்து கண்ணகியை 'இங்கிருக்க' எனச் சொல்லி மறைந்தான். பின்னர்க் கண்ணகி மிக்க துயருடன் 'காய்சினம் தணிந்தன்றிக் கணவனைக் கைகூடேன்; தீவேந்தன்தனைக் கண்டு இத்திறம் கேட்பன்' என்று சொல்லி எழுந்தவள் நின்றாள். இடருற்ற தீக்கனா நினைந்தாள்; பிறகு பாண்டியன் கோயில் நோக்கிச் சென்றாள்.

'இடருற்ற தீக்கனா நினைந்தாள்' என்ற விடத்துக் கனா என்பது தான்கண்டு தேவந்தியிடம் சொன்ன கனாவாகும் என்பர் உரையாசிரியர்கள். கோவலன் கொலையும், காவலன் முன்னர்க் கட்டுரைத்ததும் நினைந்தாள். தன் கனவுப்படி

கோவலன் கொலை நடந்துவிட்டது. இனி வழக்கும் முடிவில் கோவலனுடன் வானகம் செல்வதும் நடக்கவேண்டும். கோவலனுடன் வானகம் செல்வது உறுதி என்ற எண்ணம் அவளுக்குண்டு, ஏன் என்றால் தன் கனவுப்படி நிகழ்ச்சிகள் நடந்து வருவதுமட்டுமன்றிக் கோவலன் கனவும் அப்படியே இருந்தது.

மதுரைப் புறஞ்சிறையிடத்து ஓர் பொழிலில் கவுந்தியடிகளுக்கும் கண்ணகிக்கும் மதுரைச் சிறப்புகளைக் கூறிக்கொண்டிருந்தபோது அங்குவந்த மாடலன், கோவலனின் குண நலங்களைப் பாராட்டி அவனின் தற்போதைய வறிய நிலைக்கு இரங்கியவனாய் ஊழின் வலியைக் கூறியபோது கோவலன் தான் கண்ட கனவைக் கூறினான். ஒரு கீழ்மகன் தன்னால் கண்ணகி துயர் எய்தத்தான் கூறை கோட்பட்டுக் கோட்டுமா (எருமை) ஊர்வதாகவும் கண்ணகியுடன் சுவர்க்கம் புகுவதாகவும், மாதவி தான் துறவு கொண்டதோடு தன் மகள் மணிமேகலையையும் போதித்தானத்து அறவோன் முன்னர்த் துறவு பூணச் செய்ததாகவும் கனவு கண்டதாகக் கூறினான்.

தன் கணவன் 'இங்கிருக்க' எனச் சொல்லி மறைந்தவுடன் எழுந்தவள் தன் கனவை மட்டுமல்லாமல் கோவலன் கனவையும் நினைந்தாள் எனக் கொள்ளலாம். தன் கனவும் அவன் கனவும் ஒன்றாகவே இருந்தன. கோவலன் கனவில் கண்ணகியின் வழக்கில்லை. இருவரும் சுவர்க்கம் புக்கது உண்டு. அதனால் இருவர் கனவையும் நினைந்தவள் தன் கனவின் ஒரு நிகழ்ச்சியாகிய வழக்கும், பின் மதுரைக்கும் அரசனுக்கும் தீங்கு நிகழ்தலும் ஆகியவை நிகழ்ந்த பின்னரே கணவனைக் கூடி வானகம் ஏற வேண்டும் என்பதையே நினைந்தாள். அதனால்தான் கணவனைத் தேடுதல் இப்போது செயத்தக்கது இல்லை என்று நினைத்தவள், பொருளுரையோ (கணவனைக் கூடுதல்) இதுவன்று என்று எண்ணித் 'தீவேந்தன் தனைக் கண்டு இத்திறம் கேட்பல்' என்று அரசன் செழுங்கோயில் வாயில்முன் சென்றாள்.

சிலம்பில் கண்ணகி, கோவலன், கோப்பெருந்தேவி ஆம் மூவர் கனவு வந்துளது. கண்ணகியும் கோவலனும் நனவில் நடைபெறப் போவனவற்றை அப்படியே கனவில் கண்டனர். ஆனால் கோப்பெருந்தேவியோ நனவில் நடக்க இருப்பதை அப்படியே கனவில் காணாமல் கருத்து வகையால் உணரும்படி கண்டாள். கண்ணகி வழக்குரைப்பதும், பாண்டியன் உயிர் நீப்பதும் தானும் உடனுயிர் துறப்பதும் ஆகியவற்றைக்

கனவில் காணவில்லை. அரசனுக்குக் கேடுண்டு என்பதை உணரும் வகையில், 'குடையொடு கோல் வீழவும், அரசனின் கொற்ற வாயில்மணி நடுங்கவும், கதிரை இருள் விழுங்கவும், பகலில் மீன் விழவும், இரவு வில்லிடவும், இரு நான்கு திசையும் அதிரவும் கனவு கண்டாள். இவற்றால், 'மன்னவற்கு வருவதோர் துன்பம் உண்டு' என்று எண்ணினாள்.

கோப்பெருந்தேவி தலையாய கற்புடையவள். அவள் தன் கணவன் இறப்பதாகக் கனவு காணின் அப்பொழுதே உயிர் பிரிந்துவிடும். ஆதலின், அவள் கனவு; கருத்து வகையில் உணரும்படி (உற்பாதமாக) அமைந்தது. கண்ணகியும் கோவலனும் பின் நிகழ்ச்சிகளுக்குரியராகலின் நிகழ்ச்சிகளையே கனவில் கண்டனர்.

'தேரா மன்ன', 'நற்றிறம் படராக் கொற்கை வேந்தே' என இரு முறையும் தன் தேவி முன்னர்க் கண்ணகி தன்னை இகழ்ந்து கூறியும் பாண்டியன் சினம் கொண்டு அவளைச் சிறைப்படுத்தாமல் அமைதியாகக் கேட்டதற்குக் காரணம், தேவி தான் கண்ட கனவைச் செவ்வனே எடுத்துரைதது, 'வருவதோர் துன்பம் உண்டு' என்று சொன்னவுடன் அடுத்த நிகழ்ச்சியாகக் கண்ணகி வழக்கிட வந்தமையால் அவள் சுடுசொற்கள் அவனுக்குச் சினத்தை மூட்டாமல் திகைப்பை யுண்டாக்கி யிருக்க வேண்டும். அன்றியும் கண்ணகியின் தோற்றமும் அவனுக்கு ஓர் அச்சத்தை யுண்டுபண்ணியிருக்க வேண்டும். கண்ணகி வருமுன் வாயில் காவலன் வந்து கண்ணகியின் வரவை அறிவித்தபோது அவளைப்பற்றிக் கொற்றவை பிடாரி, காளி, பத்திரகாளி என்பனவெல்லாம் சொல்லித் தடுமாறினான். அந்த நினைவும் அரசனுக் கிருந்ததால் தான் திகைத்தவனாய் அமைதியாக இருந்தான். அதனால்தான் "பெண் அணங்கே" (தீண்டி வருத்தும் பெண் தெய்வம்) என விளித்தான். எனவேதான் கண்ணகியின் கொடுஞ் சொற்களைக் கேட்டும் பொருட்படுத்தாமல் வழக்கிலேயே கருத்துடையவனானான்.

இவ்வகையில் மூவர் கனவுகளையும் திறமாக அமைத்த இளங்கோவடிகளை நாம் வியக்காமல் இருக்க முடியுமா?

---

# பொருளும் பொருந்தா உரையும்

(வித்துவான் செக. சீனிவாசன்,

தமிழாசிரியன், தேசிய உயர்நிலைப்பள்ளி, கல்கத்தா)

உலகில் வேறுமொழிகளி லில்லாப் புதுமையாகத் தமிழ் மொழியில் பொருளிலக்கணம் கண்டனர் நம் முன்னோர்கள். ஆனால் அதற்கு உரை வகுத்தவர்கள் தமது பிறமொழித் திறனைக் காட்ட இலக்கண ஆசிரியரின் கூற்றுக்குப் பொருந்தா வகையில் உரை யாத்துள்ளனர்.

தொல்காப்பியத்தில் 'உயர்ந்தோர்க் குரிய வோத்தி னான' (தொல்-பொருள்-31) என்ற நூற்பாவிற்கு உரையியற்றிய,

'பருவ ராலுகள் வாவிசூழ் மதுரையம் பதிவாழ் பொருவரா' ஆசிரியர், பாரத்துவாசி, நச்சினார்க்கினியர் பின் வருமாறு இயற்றியுள்ளார்.

'வேதத்தினாற் பிறந்த வட நூல்களும் தமிழ் நூல்களும் அந்தணர் அரசர் வணிகர்க்கும், உயர்ந்த வேளாளர்க்கும் உரிய என்றவாறு.

அவை சமய நூல்களும் ஒன்றற்கொன்று மாறுபாடு கூறும் தருக்க நூல்களும் தரும நூல்களும் சோதிடமும் வியாகரணம் முதலியனவும் அகத்தியம் முதலாகத் தோன்றிய தமிழ் நூல் களுமாம். வேதந்தோன்றிய பின்னர் அது கூறிய பொருள்களை இவையும் ஆராய்தலின் ஒத்தினான வென்று அவற்றிற்குப் பெயர் கூறினார் ; ஒத்தென்பது வேதத்தையே யாகலின்.

தொல்காப்பியம் வடவேங்கடம் தென்குமரி யாயிடை, தமிழ் கூறும் நல்லுலகத்திற்கு, வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின் எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி, செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு........மயங்கா மரபின் எழுத்து முறை காட்டித் தொல்காப்பியரால் எழுதப்பட்டதாகும். அவர் ஐந்திரம் நிறைந்தவர்தாம். ஆனால் தமிழ்மொழிக் கிலக்கணம் கண்டவர். அதைத் தாம் மறவாமல் பல இடங்களில் சுட்டிக் காட்டியுள்ளார்.

எழுதப் படுவது எழுத்து

சொல்லப் படுவது சொல்

ஓதப்படுவது ஓத்து என்ற முறையில் எழுத்து, சொல், ஓத்து என்பன ஆகுபெயராக அமைந்துள்ளன.

> "மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்
> பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்"

என்று வள்ளுவனாரும் கூறுவதைக் காண்க.

மேலும் தொல்காப்பியனாரே களவியலில் களவு மணத்தைக் குறிக்குங்கால்

'மறைஓர் தேஎத்து மன்றல் எட்டனுள்' என்று வடமொழி தேயத்தைத் தனியாகப் பிரித்துக் காட்டி மறை என்பது வேதம் என்பதையும் உணர்த்தினர். எனவே, ஓத்து என்பது ஓதப் படுவ வெல்லாவற்றிற்கும் பெயராகு மென்பது தெளிவாகும். அவற்றுள் மறையும் ஒன்ருகும்.

இனி, 'உயர்ந்தோர்க் குரிய ஓத்தினன' என்ற நூற் பாயிரம் எங்கு வந்துள்ளது என்று பார்த்தல் நலம். இது,

"ஓதல் பகையே தூதிவை பிரிவே" என்ற 25ஆம் நூற்பா முதல்

> "பொருள்வயிற் பிரிதலும் அவர்வயின் உரித்தே
> உயர்ந்தோர் பொருள்வயின் ஒழுக்கத் தான"

என்ற 33 ஆம் நூற்பா வரை கூறப்பட்ட பிரிவிற் கிடையில் வந்துள்ளது.

மக்கள் நால்வகையாக - அவரவர் தொழிலுக் கேற்றவாறு- பிரிக்கப்பட்டனர். அந்தணன் ஓதுவிக்கும் தொழிலையும் அரசன் நாடாளும் தொழிலையும் வணிகன் பொருள்களைச் சேர்த்து வாணிபம் செய்யுந் தொழிலையும் உழவர் உழைப்பு மிக்க தொழிலையும் செய்தனர். இத்தொழில்கள் வழிவழி வரலாயின. எனவே, முதல் மூவரைவிட நான்காமவனுன உழவனுக்குக் கல்வி கற்கும் வாய்ப்புக் குன்றியது. ஓதி, ஓதுவித்தற் குரிய அந்தணர் இதையே தமது பக்க வலியாகக் கொண்டு விதி வகுத்து விட்டனர். இதனைத் தொல்காப்பியரே கூறுகின்ருர் - பாருங்கள்.

> "பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
> ஐயர் யாத்தனர் கரணம் என்ப"

(தொல்-பொருள்-145)

இதிலுள்ள ஐயர் என்பதற்கு இருடிகள் என்று நச்சினுர்க் கினியரே கூறியுள்ளார். தொழில் முறையில் பிரிந்த மக்கள் அப்பிரிவு காரணமாகவும் தொழில் காரணமாகவும் அன்றே வஞ்சிக்கப்பட்டு விட்டனர்.

இனி உயர்ந்தவர்கள் ஓதலின் காரணமாகப் பிரிவதற்கு உரியவர்கள் என்பதையும் கீழோர் பிரிவுக் குரியவர் அல்லர் என்பதையும் உணர்த்தும் அந் நூற்பாவில் உள்ள 'ஓத்தினுன' என்பதை ஆராய்வாம்.

வடமொழி வேதத்தைக் கரை கண்டவரான நச்சினுர்க் கினியர் ஓத்து என்பதை வேதம் - அதுவும் வடமொழி வேதம் என்றே பொருள் கூறிவிட்டார். வடநூல்கள், தமிழ் நூல்கள் அனைத்தும் வடமொழி வேதத்தில் தோன்றியவை என்பது அவருடைய எண்ணம். இன்னும் அதை விரிக்குங்கால், 'சமய நூல்களும் ஒன்றற் கொன்று மாறுபாடு கூறும் தருக்க நூல் களும் சோதிடமும் வியாகரணமும்' என்று வடமொழி நூல்களை விரித்துரைத்தபின் அகத்தியம் முதலாகத் தோன்றிய தமிழ் நூல்களும் அவர் நினைவுக்கு வந்தனபோல் கூறினுர். பின்னரும் 'இவை யாவும் வேதம் கூறுவதையே ஆராய்தலின் ஓத்தின் ஆன என்ருர்' என்று முடித்தார். எனவே, அகத் தியம் முதலாய தமிழ்நூல்கள் அனைத்தும் வடமொழி வேதத்தின் பொருளை ஆராய்கின்றன என்பது அவர் கருத் தாகிறது. எனவே, தமிழ் மொழி என்ற ஒன்றும் அதற்கென்று உரிமையுள்ள நூல்கள் என்று எவையும் இல்லை என்பது அவர் எண்ணம்போல் தோன்றுகிறது. 'இதுதான் தொல்காப்பிய ருடைய கருத்தா?' என்று நினைத்துப் பார்க்காமல் எழுதி யுள்ளார். தமிழுக்கிலக்கணம் வகுக்க வந்த தொல்காப்பியர், 'வடமொழி நூல்களை யார் கற்கலாம் யார் கற்கக் கூடாது' என்பதையா கூறுவார்? என்றும் அவர் (நச்) சிந்திக்கவில்லை. நாம் சிந்திப்போம்.

'மறை ஓர் தேஎத்து' என்று தேயத்தையே பிரித்துக் காட்டிய தொல்காப்பியனுர் அத்தேயத்தாருடைய மொழியி லுள்ள சொற்கள் தமிழில் எவ்வாறு வழங்க வேண்டுமென்று தனி இலக்கணமாக 'வடசொல்' என்று வகுத்துத் தந்த திலிருந்து நச்சினுர்க்கினியர் உரை பொருந்தவில்லை என்பதைத் தெளிவோம்.

"வடசொல் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே"

(தொல்-சொல்-401)

என்ற நூற்பாவையே நச்சருக்கு மறுப்பாகக் காட்டலாமே?

இனி,

"தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்து
அதர்ப்பட யாத்தலொடு அனைமர பினவே"

(தொல்-பொருள்-மரபு-97)

என்ற நூற்பா விலக்கணத்திற் கிணங்கப் பிறமொழி நூல்களைத் தமிழ்ப் படுத்தலாம். ஆனால் அவற்றை யார் கற்கலாம் என்று விதி செய்ய இயலாது. கல்வி என்பது ஒருவர்க் குரியதன்று. யாரும் கற்கலாம். வாய்ப்பின்மையால கற்காமல் இருக்கலாம். அதுவே விதியாக்கப்பட்டால் அது கொடுமையாகும். இக் கொடுமை அன்று முதலே நடந்து வருகிறது. இக்கொடு மைக்கு எதிர்ப்பும் உண்டாகி யிருக்கிறது. ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்ற பேரரசனே இக்கொடுமையை எதிர்த்துக் கல்வியின் சிறப்பைப் பாடியுள்ளான்.

"வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனும் அவன்கட் படுமே."

(புறம்-183)

எனவே, 'உயர்ந்தோர்க் குரிய ஓத்தி னை' என்பதற்கு நச்சினார்க்கினியர் உரை பொருந்தாது என்று உணரலாம்.

உழைப்புக் காரணமாகக் கற்க இயலாத நிலைக்காளாகி விட்டதே அவர்களைத் தாழ்த்திவிட்டது என்பதூஉம், ஓத்து என்பது வடமொழி வேதமோ அல்லது நூல்களோ அல்ல, தமிழ் மொழியில் ஓதற்குரிய நூல்கள்தாம் என்பதூஉம் இவ் வாராய்ச்சிக் கட்டுரைவழி நிலைநிறுத்துகிறேன். அந்நிலை மாறி யாவரும் கற்குங் காலமான இக்காலத்திலும் பொருந்தா வுரைகளைப் படித்துப் பொய்யான வாழ்வு வாழ்தல் நன்றோ?

# யானைக்கண் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை

[க. ப. அறவாணன், எம் ஏ., பி.ஓ எல்.,

துணைத்தமிழ்ப் பேராசிரியர், பச்சையப்பன் கல்லூரி, சென்னை]

சங்க இலக்கியத்துள் விரவிக் கிடக்கும் விண்ணியல் செய்திகளுள் ஒரு செய்தி கொடுமுடி போன்ற தனித்தன்மை வாய்ந்தது. சேரமன்னன் ஒருவனின் சாவை, கோள் நாள் கிழமை, மாதத்தோடு தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. பாட்டு குறிப்பிடும் நாட்குறிப்பைத் தெளிவாகக் கணித்து விடுவோமேயானால், அம் மன்னன் இறந்த மாதம் நாளைத் துல்லியமாகக் கணக்கிட்டுவிட முடியும். அதன் மூலமாகப் பதிற்றுப்பத்தின் காலம், சேரவேந்தனின் காலம், சங்க இலக்கியக் காலம் ஆகியவற்றையும் வரையறுத்துவிட முடியும். எனினும், இப்பாட்டு குறிப்பிடும் காலக் குறிப்பைக் கணிக்க அறிஞர்கள் முயன்றிருக்கின்றனர். தெளிவாகக் கணக்கிட இயலாமையால், முயற்சி பயனற்றுப் போயிற்று.[1] இக் கட்டுரை அச்செய்யுள் காட்டும் காலத்தை அறிவியல் அடிப் படையில் கணிக்க முயலுகிறது.

## சேரர்குல மாந்தரஞ்சேரல் இரும்பொறை:

புறநானூற்றில் 229ஆம் செய்யுளைப் பாடியவர் கூடலூர் கிழார். இவரால் பாடப்பெற்ற அரசன், கோச்சேரமான் யானைக்கண் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை. வானில் புகைக்கொடி என்ற தூமகேது பூமிக்கு விளக்குப்போல ஒளி விட்டுப் பெரும் ஓசையுடன் தீப்பறக்கக் காற்றால் பிதிர்ந்து கிளர்ந்து உறுமி, விழுந்ததாகவும், அதனால் ஏழாம் நாள் சேர அரசன் யானைக்கண் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை இறந்ததாகவும் குறிப்பிடுகிறார். அப் புகைக்கொடி வீழ்ந்த வேகத்தையும் ஒளிச் செழுமையையும், வீழ்ந்தபின் ஏற்பட்ட விளைவையும் ஆராய்ந்து பார்க்கும்போது, தீமை விளைக்கும் தூமகேதுவே தோன்றியுள்ளது, என்று முடிவு கட்டலாம். இவ்வாறு தூமம் தோன்றினால், நாடு கெடும்; ஊர்

---

1. Cera kings of the Sangam Period—K. G. Sesha Aiyar p. 66.

கெடும்; உலகம் கெடும்; வாழ்வோர் கெடுவர்; ஆள்வோர் கெடுவர்.[1]

**உலக வரலாற்றில் தூமகேது :**

"The Comet is an infallible sign of a very evil event. Whenever eclipses of the sun or moon, or Comets or earthquakes, conversions of water into blood, and such like prodigies happen, it has always been known that very soon after these miserable portents offictious, effusion of human blood massacres, deaths of great monarchy, kings, princes, and rulers, seditions, kingdoms or villages; hunger and scarcity of provisions, burning and overthrowing of towns; pestilences widespread mortality, both of beasts and men; in fact all sports of evils and misfortunes take place"

என்று தூமகேதுவின் தோற்ற விளைவுகளின் கொடுமைகளை அறிஞர் ஜான் எஃ பிளேக் 'Astronomical Myths' என்ற நூலில் (பக் - 350) விவரிக்கிறார். புகைக்கொடி தோன்றினால் விளையும் தீமைகளை, விளைந்த தீமைகளை, தீமை விளையும் என்ற நம்பிக்கையை மேற்கண்ட குறிப்பு உணர்த்துகிறது. இவ்வாறு விளைந்த தீய நிகழ்ச்சிகட்குப் பல சான்றுகள் உள்ளன.

கி. மு. 48இல் தூமகேது உரோமில் தோன்றியபோது சீசருக்கும் பாம்பேக்கும் கொடும்போர் மூண்டது.

கி. மு. 79இல் தூமகேது தோன்றிய சில நாளில், உரோமப் பேரரசன், வெஸ்பாசியன் (Vespasian) இறந்து விட்டான்.

கி. பி. 218 ஏப்ரல் 8ஆம் நாள் சைனாவிலும் உரோமிலும் தூமகேது அச்சமூட்டும் எரிசுடராகத் (a fearful flaming Star) தோன்றினதை அடுத்து, வேந்தன் அட்டிலா (Attila) உயிர் நீத்தான்.

கி. பி. 837, பிப்ருவரி 25இல் அதே புகைக்கொடி சீன ஐரோப்பியக் கண்டத்தில் தோன்றியது. இதனை யடுத்து,

---

1. புறம். 43, 117, 395, சிலம்பு : 10-192; கம்பன். அயோத். மந்தரை. 22. ஆகிய இடங்களில் வரும் இலக்கியக் குறிப்புக்கள், தூமகேதுவின் தோற்றம் நாட்டுக்கும், வீட்டுக்கும் கேடு பயக்கும் எனக் காட்டுகின்றன.

வேந்தன் லூயிஸ் லி டிபானேரே (Louis le Debonnaire) மடிந்தான்.

கி. பி. 1066 மார்ச்சுத் திங்கள் 25ஆம் நாள் ஐரோப்பாவில் தூமகேது தோன்றினபோது, வில்லியம் என்ற நார்மண்டி தலைவனால் (William, Duke of Normandy) இங்கிலாந்து வெல்லப்படும் என்று எச்சரிக்கப்பட்டது.

கி. பி. 1456 சூன் திங்கள் ஐரோப்பாவில் ஹாலிஸ் தூமகேது தோன்றியது. இதனை அடுத்து, கான்ஸ்டாண்டி நோபில் என்ற நகரம் துருக்கி (Turks) களால் கைப்பற்றப் பட்டது.

சசோனசெனஸ் (Sazonacenas) என்ற வரலாற்று ஆசிரியன் காலமான கி. பி. 400 கான்ஸ்டாண்டி நோபிலில் தூமம் தோன்றியது. அது அந்நகருக்கு வரக்கூடிய வருங் காலத் தீமைகளைச் சுட்டிக் காட்டியது.

கி. பி. 1000 த்தில் உலகமே ஒரு தூமகேதுவின் வீழ்ச்சியால் எரிந்து அழிந்துவிடப் போகிறது என்று சோதிடர்கள் கணித்திருந்தார்கள்.

கி. பி. 837இல் தூயவாரத்தில் (Holy week) விண்ணியலின் நிலைகளைப் பார்த்து ஐயமுற்ற லூயிஸ் லி டிபானேரே என்ற அரசன் தன் சோதிடர்களை அழைத்து 'I know that this sign is a comet; it announces a change of reign and the death of a prince" என்று கூறியுள்ளான்.

கி. பி. 1224, ஜூலையில் தூமகேது தோன்றின அன்றே போப் இறந்துவிட்டார்.

கி. பி. 1527இல் தூமகேது தோன்றியபின், பலர் இறந் தார்கள்; பலர் நோயுற்றார்கள் என்று எழுதுகிறான் சைமன் கோலார்ட் (Simon Goulart).

பின்கிரே (Pingrey) என்பவன் தூமகேதுவின் தோற்றம், நிகழப்போகும் போரையும் வரப்போகும் வேந்தன் சாவையும் எடுத்துக் காட்டுவதாகும் என்று குறித்திருக்கிறான்.

கி. பி. 1456இல் தூமகேது தோன்றினபொழுது மக்கள் பயந்து நடுங்கினார்கள்; நாட்டுக்குத் தீங்குவரும் என்று அஞ்சினார்கள்.

---

3. Comets: Their nature, origin, and place in the science of Astronomy—By Mary Proctox and Dr. A. C. D. Crommelion Chapter iv The Story of Helley's Comet.

ஐரோப்பியத் தேவாலயங்களில் தங்களைச் சாத்தான்க ளிடமிருந்தும் தூமகேதுகளிடமிருந்தும் காத்தருளுமாறு இறைவனை வேண்டுவார்கள்.[1]

கி. பி. 1606இலும், கி. பி. 1682இலும், கி. பி. 1759இலும், கி.பி. 1835இலும் தூமம் தோன்றினபோது பேரழிவுகள் நேர்ந்தனவாம். 1910 ஏப்ரலில் தோன்றின பன்னிரண்டாம் நாளில் இங்கிலாந்தின் எட்வர்டு VII மடிந்தாராம், 1986ஆம் ஆண்டில் மீண்டும் தோன்றும்போது உலகப்போர் மூளுமாம்.[2]

ஆக உலக வரலாற்றறிஞர்களும் விண்ணியல் வல்லுநர் களும் கணிதநூல் வல்லுநர்களும் அறிவியல் அறிஞர்களும் தந்திருக்கின்ற மேற்கண்ட குறிப்புக்கள் தூமகேதுவின் தோற்றம் நாட்டில் அரசியல் மாற்றத்தையும் ஆளும் வேந்தனின் வீழ்ச்சியையும் முன்காட்டி உணர்த்தும் தீ நிமித்தமே என்பதை உறுதிப்படுத்துகின்றன. ஆதலால் கூடலூர் கிழார் சுட்டிக்காட்டும் விண்மீன் வீழ்ச்சி, தூம கேதுவின் தோற்றமே என்பதும் அதன் தோற்றத்தை அடுத்து, ஆண்ட சேர வேந்தன் மாண்டான் என்பதும் தெளிவாகின்றன. புறநானூற்றில் புலவரால் குறிக்கப்படும் தூமகேது, காலந்தோறும் ஒழுங்காகத் தோன்றிவரும் ஹாலிஸ் காமட் (Halleys comet) என்பது அறிஞர்கள் கண்ட முடிவு.[3]

அறிவியல் மேதை நியூட்டனின் தோழர் ஹாலி என்பவ ரால் முதன் முதலாக இத்தூமகேதுவின் வரன்முறை கண்டு பிடிக்கப்பட்டதால் அவர் பெயராலேயே அது வழங்கப்பட்டு வருகிறது. இது எழுபத்தைந்து ஆண்டுகளுக்கு ஒருமுறை பிறழாமல் தோன்றுகிறது என்பதையும் ஹாலி கண்டு பிடித்தார். 1758இல்தான், தான் முதன்முறை பார்த்தாலும் அதற்கு முன்பு எவ்வெப்பொழுது அது தோன்றியது என்பதைச் சீன உரோம சோதிடக் குறிப்பேடுகளை வைத்துத் தூமகேது தோன்றிய வரலாற்றை எடுத்துரைத்தார். குறிப் பேடுகள்வழி அறியப்பட்ட தூமகேதுவின் முதல் தோற்றம் கி. பி. 240இல் ஆகும். ஹாலி தந்த அறிவியல் செய்திகளைத் தொடர்ந்து, அறிஞர்கள், குரோம்லின் (crommelin) கோவெல்

---

1. The Short History of the Universe—By Gracer. p. 121.

2. This Comet brings disaster—The Sunday Standard, May 2, 1971.

3. *செந்தமிழ்ச் செல்வி—சூலை 1970.* பக். *509 - 512*; புகைக் கொடி—பி. எல். சாமி.

(cowell) ஆகியோர் மேலும் ஆராய்ந்தனர். இவர்களது ஆராய்ச்சி ஹாலியின் ஆய்வு முடிவை உறுதிப்படுததியது.[1] இவர்களது முடிவின்படி, ஹாலி தூமகேது கி. மு. 240இல் தொடங்கி, கி. பி. 1910 வரை இருபத்தொன்பது முறை தோன்றியிருக்கிறது. இவ்வாறு தோன்றிய நாட்களில் ஒரு குறிப்பிட்ட நாளை அடுதத ஏழாம் நாளில்தான், சேரமன்னன் மடிந்திருத்தல் வேண்டும் என்பது தெளிவு. ஆதலால் அந்த இருபத்தொன்பது நாட்களையும் எடுத்துக்காட்டி ஆராய்வோம்.

| தூமகேது | தோன்றிய | | நாட்கள் | | |
|---|---|---|---|---|---|
| கி.மு 240 | மேத் | திங்கள் | 15ஆம் | நாள் | |
| கி.மு. 163 | ,, | ,, | 20 | ,, | ,, |
| கி.மு. 87 | ஆகஸ்டு | ,, | 15 | ,, | ,, |
| கி.மு. 12 | அக்தோபர் | ,, | 8 | ,, | ,, |
| கி.பி. 66 | சனவரி | ,, | 26 | ,, | ,, |
| கி.பி. 141 | மார்ச்சு | ,, | 25 | ,, | ,, |
| கி.பி. 218 | ஏப்ரல் | ,, | 6 | ,, | ,, |
| கி.பி. 295 | ,, | ,, | 7 | ,, | ,, |
| கி.பி. 374 | பிப்ருவரி | ,, | 13 | ,, | ,, |
| கி.பி. 451 | ஜூலை | ,, | 3 | ,, | ,, |
| கி.பி. 530 | நவம்பர் | ,, | 15 | ,, | ,, |
| கி.பி. 607 | மார்ச்சு | ,, | 26 | ,, | ,, |
| கி.பி. 684 | நவம்பர் | ,, | 24 | ,, | ,, |
| கி.பி. 766 | ஜூன் | திங்கள் | 10 | ,, | ,, |
| கி.பி. 837 | பிப்ருவரி | | 25 | ,, | ,, |
| கி.பி. 912 | ஜூலை | ,, | 19 | ,, | ,, |
| கி.பி. 989 | செப்டம்பர் | ,, | 2 | ,, | ,, |
| கி.பி. 1066 | மார்ச்சு | ,, | 25 | ,, | ,, |
| கி.பி. 1145 | ஏப்ரல் | ,, | 19 | ,, | ,, |
| கி.பி. 1222 | செப்டம்பர் | ,, | 10 | ,, | ,, |
| கி.பி. 1301 | அக்தோபர் | ,, | 23 | ,, | ,, |
| கி.பி 1378 | நவம்பர் | ,, | 8 | ,, | ,, |
| கி.பி. 1456 | ஜூன் | ,, | 2 | ,, | ,, |
| கி.பி. 1531 | அக்தோபர் | ,, | 5 | ,, | ,, |
| கி.பி. 1607 | ,, | ,, | 26 | ,, | ,, |
| கி.பி 1682 | செப்டம்பர் | ,, | 14 | ,, | ,, |
| கி.பி 1759 | மார்ச்சு | ,, | 12 | ,, | ,, |
| கி.பி. 1835 | நவம்பர் | ,, | 15 | ,, | ,, |

1. Comets—By Dr. Crommelin—P. 67.

கி.பி. 1910 ஏப்ரல் திங்கள் 19ஆம் நாள்
கி.பி. 1986 பிப்ருவரி ,, ? ,, ,,

மேலே குறிப்பிட்ட [1]நாட்களில் ஒரு நாளைத்தான் பாவலர் கூடலூர் கிழார் சுட்டியிருத்தல் வேண்டும். அந் நாளைத் தனித்துப் பிரித்தறிவது எப்படி? அப்பாவலரே, அந் நாளைக் கண்டறிய, சில குறிப்புக்களைத் தந்திருக்கிறார். தூமகேது தோன்றிய அந்நாள், கார்த்திகை நாள். மேடராசியின் முதற்பாதம்; நிறைந்த இருளையுடைய பாதி இரவு; முடப்பனை போன்ற வடிவையுடைய புனர்பூச வெள்ளிக் கிழமை; பங்குனித் திங்கள், திங்களில் முதற் பதினைந்து உச்சமாகி. உத்தரம் அவ்வுச்சியினின்று சாய, அதற்கு எட்டாம் மீனாகிய மூலம் அதற்கு எதிரே எழாதிருக்க, அந்த உத்தரத் திற்கு முன் சொல்லப்பட்ட எட்டாம் நாளாகிய மிருக சீடமாகிய நாள்மீன் துறையிடத்தே தாழ கீழ்த்திசையில் போகாது, வடதிசையில் செல்லாது, கடலால் சூழப்பட்ட பூமிக்கு விளக்காக, காற்றால் பிதிர்ந்து, கிளர்ந்து, வானத்தினின்றும் ஒருமீன் விழுந்தது. இங்கே சொல்லப்பட்ட, பங்குனித் திங்கள் வெள்ளிக்கிழமை, மேலே குறிப்பிட்ட நாட்களுள் எதனைக் குறிக்கிறது என்பதை ஆராய்தல் வேண்டும்.

எல். டி. சாமிக்கண்ணுப் பிள்ளை ஆராய்ந்து வெளியிட் டுள்ள 'An Indian Ephemeris' தொகுதி I, பகுதி I எனும் ஆய்வுநூலைத் துணையாகக் கொண்டு ஆராயப்பட்டது. மேற் கண்ட நூல் பக்கம் 29 இல் கொடுத்துள்ள ஆண்டுக் குறிப் பின்படி, கி. பி. 141 மார்ச்சு மாதம் 25 ஆம் நாளே, புலவர் குறித்த பங்குனித் திங்கள் வெள்ளிக்கிழமையோடு பொருந்தி வருகிறது. சேர நாட்டில் தூமகேது தோன்றிய நாள் 25-3-141 என்றறியப்படுகிறது. இதனையடுத்த எழாம் நாளில் சேரன் மடிந்தான் எனப் புலவர் குறிபபிடுகிறார். இக் குறிப்பின்படி, சேரன் யானைக்கண் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை இறந்த நாள் 31-3-141 ஆக இருத்தல் வேண்டும்.

அண்மையில் புகளூரில் கிடைத்த கல்வெட்டுக்களை ஆராய்ந்த அறிஞர்கள் அக் கல்வெட்டின் காலம், கல்வெட்டுக் காட்டும் சேர பரம்பரையின் காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண் டாகவே இருத்தல் வேண்டும் என்று முடித்திருக்கும் முடிவும், மேற்கண்ட விண்ணியல் முடிபோடு இணங்கி இருப்பதும் நினைக்கத் தகுந்தது. [2]

1. The Elements of Astronomy—By Edward Arthur Fath—1934 PP. 207—233.

2. Tamil Brehmi Inscriptions of the Sangam Age—By I. Mahadevan—P. 28.

# சிலப்பதிகாரம் என்பதின் பொருள் யாது?

[டாக்டர். துரை. சிங்காரவேலன் M.A. Ph. D.,

தமிழ்த்துறைத் தலைவர்,
உசுமானியாப் பல்கலைக் கழகம், ஐதராபாத்.]

சிலப்பதிகாரம் என்பதற்கு, சிலம்பு காரணமாக வளர்ந்த வரலாற்றினை உரைப்பது எனப் பொருள் கூறியுள்ளனர். இதுபற்றி ஆராய்வோம்.

இவர், "சிலம்பு" என்ற சொல்லிற்கு, பெண்ணின் காலணியாகிய சிலம்பு என்று கொள்கின்றனர். சிலம்பு என்னும் பெயரினைக் கொண்ட, காலணியாகிய, சிலம்பு காரணமாக. வளர்ந்த வரலாற்றினை உரைப்பது சிலப்பதிகாரம் என்று பொருள் கொள்ளின், ஏற்படும் சிக்கல்களைக் காண்போம்.

**எந்தச் சிலம்பு?**

கண்ணகியின் சிலம்பா? பாண்டிமாதேவியின் சிலம்பா? என்னும் கேள்விகள் எழும். பாண்டிமாதேவியின் காணாமல் போன சிலம்பென்று கொள்வோமாயின்; கண்ணகியின் சிலம்பு இல்லை என்றால் அது பயன்படுவதில்லை. கண்ணகியின் சிலம்பு என்றால் பாண்டிமாதேவியின் சிலம்பு இல்லையெனில், இவ்வரலாறு தோன்றியிருக்க முடியாது. பொதுவாகச் சிலம்புகள் காரணமாக வளர்ந்த வரலாறு என்று கொண்டால், எல்லாச் சிலம்புகளும், இவ்வரலாற்றைத் தரவில்லை என்பது நன்கு விளங்கும். அன்றியும், சிலம்புகள் அதிகாரம் எனப் பன்மையிலேயே தலைப்பு இருத்தல் வேண்டும் "சிலம்புகள் அதிகாரம்" என்பதைச் சிலப்பதிகாரம் என்று கூறுதல் இலக்கணப் பிழையாகும். எனவே சிலப்பதிகாரம் என்பதற்கு இவ்வாறு பொருள் கூறுதல் பொருத்தமற்றது; விளக்கமற்றது. இவ்வரலாற்றிற்குக் காரணமாக இருந்தது எது? என்பதைச் சிந்திப்போம்.

**வரலாற்றிற்குக் காரணம் ஊழ்வினையே!**

இவ்வரலாற்றிற்குக் காரணமாக இருந்தது. கோவலனது ஊழ்வினையே ஆகும் என்பதைச் சிந்திப்பார் நன்கு உணர்வர்.

இதனை மதுரை மாதெய்வம் கண்ணகிக்கு "மாதராய் ஈதொன்று கேளுன் கணவற்குத் தீதுற வந்த வினை" எனக் கூறி, கோவலனின் முன் பிறவியினைச் சொல்லி, அவன் கொல்லப்பட்டதற்குக் காரணமே, ஊழ்வினை என்பதைத் தெளிவாக்குகின்றது. கோவலன் கண்ணகியின் வரலாற்றிற்கு, ஊழ்வினையே காரணம் என்பதை அடிகள் பல இடங்களில் கூறியிருத்தல் சிந்தித்தற்குரியது. உதாரணமாக, கானல் வரியில் கோவலன் மாதவியின்பால் மனமாறுபாடு கொண்டு பிரிந்ததை

> "யாழிசைமேல் வைத்துத்தன் ஊழ்வினைவந் துருத்ததாகலின்
> உவவுற்றதிங்கள் முகத்தாளைக் கவவுக்கை ஞெகிழ்ந்தனனாய்"

என்று கூறுகின்றார். இவ்வாறு, இவ்வரலாறு தோன்றுதற்குக் காரணம் சிலம்பன்று, ஊழ்வினையே ஆகும் என்பது தெளிவாகும். இதனையே மாடலனின் வாயிலாகவும்

> "வாழ்க வெங்கோ மாதவி மடந்தை
> கானற் பாணி கனக விசயர்தம்
> முடித்தலை நெரித்தது"

என்பதனால் மாதவி பாடிய கானல்வரியே, இவ்வரலாற்றைத் தந்தது என்பதும் தெளிவாகும். எனவே இவ்வரலாற்றிற்கு மூலகாரணம் ஊழ்வினையே ஆகும் என்பது தெளிவாகும். சிலம்பு காரணமாக வளர்ந்த வரலாறு என்று கூறுதல் பொருந்தாக் கூற்றே ஆகும்.

அவ்வாறாயின், சிலப்பதிகாரம் என்று இக்காவியத்திற்கு இளங்கோவடிகள் தலைப்புத் தருவானேன்? இதுபற்றி ஆராய்வோம்.

### வரலாற்றின் தன்மை

மக்கள் தோன்றி, செயலாற்றி இறப்பதைக் கூறுவதே வரலாறாகும். ஆயினும் பெரும்பாலோரைப் பற்றிப் பிறர் உணர முடிவதில்லை. அவர் அந்த அளவிற்குப் புகழ் இன்றி மாள்வதே அதற்குக் காரணமாம். எனவே, வரலாறு காணப் படுவதற்குக் காரணம் அவ்வரலாற்றிற்கு உரிமையானவரின் சிறப்பே ஆகும். ஒருகாலத்தில் தோன்றும் வரலாறு, தொடர்ந்து நிலைத்திருப்பதில்லை. மக்கள், வரலாற்றை மறந்துவிடுவதே அதற்குக் காரணமாகும். எனவே, ஒரு

வரலாறு நிலைத்திருக்க வேண்டுமாயின், அவ்வரலாற்றிற்கு உரிமையானவர் சிறப்புடையவராக இருப்பதோடு, அவர்தம் சிறப்பு மக்களால் போற்றப்படும் நிலையிலும், மக்களுக்கு அவர்தம் வரலாறு நன்மை தரும் நிலையிலும் இருத்தல் வேண்டும். அத்தகைய வரலாறே என்றும் எல்லாச் சமூகத்தாலும் போற்றப்படும் நிலையில் இருக்கும்.

மக்களின் ஆதரவைப் பெற்ற வரலாறே, உலகில் நிலைத்திருக்கும். மக்களின் ஆதரவைப் பெறாத மக்களால் போற்றப்படாத வரலாறு. எத்தகைய வேறு சிறப்பினையுடையதாயினும் நிலைத்திருப்பதில்லை. இதுவே உண்மையாகும், இவ்வுண்மையை அடிப்படையாகக் கொண்டு கோவலன் கண்ணகியின் வரலாற்றை நோக்குவோம்.

கோவலன் பாண்டி மாதேவியின் சிலம்பினைத் திருடிய கள்வன் என்று சொல்லப்படுகிறான். கண்ணகி தனது சிலம்பைக் கையிலேந்திச் சென்று கோவலன் குற்றமற்றவன் என்பதை நிலைநாட்டி, மதுரை மாநகரத் தீயவரை அழித்து, சேரநாட்டில் உள்ள மலையொன்றில் ஏறிநின்று, அங்கு வந்த குன்றக் குறமகளிரிடம் தனது வரலாற்றைச் சொல்லுகிறாள். அதுகாலை கோவலன் வந்து கண்ணகியை விண்ணுலகுக்கு அழைத்துச் செல்வதை, குறமகளிர் காண்கின்றனர். இத்துடன் கோவலன் கண்ணகி வரலாறு முடிவடைகிறது என்பதில் ஐயமில்லை! இத்துடன் இவ்வரலாறு முடிவடையுமாயின், இவ்வரலாறு மக்கள் உள்ளத்தில் இடம் பெற்றிருக்காது. சிலகாலம் சிலரால் மட்டும் பேசப்பட்டு, மறக்கப்பட்டிருக்கும். இத்துடன் இவ்வரலாறு முடிந்திருப்பின், கண்ணகி கொடுமையுடையாளாகவும் கருதப்பட்டிருத்தல் கூடும். ஏனெனில், அவள் இறுதியில் செய்த செயல், மதுரையில் உள்ள கொடியவரை அழித்ததாகும்.

உதாரணமாக, சாத்தனாரின் கருத்தை நோக்குவோம். இவர் கண்ணகி மதுரையை அழித்தபொழுது வெள்ளியம்பலத்தில் இருந்தவர். கோவலனின் இறுதிக்கான காரணத்தை மதுரைமாதெய்வம் கண்ணகியிடம் சொன்னபொழுது, தானே கேட்டவர். இவர் புலமைத் தன்மை மிக்கவர். இத்துணை வாய்ப்புக்களைப் பெற்றிருந்த சாத்தனார், கண்ணகியின் வரலாற்றைக் காவியமாக எழுதவேண்டும் என்று விரும்பவில்லை. இதனைச் சிறந்த வரலாறெனக் கருதவும் இல்லை என்பதை இவர்தம் செயலே காட்டும்! இவர் செயலைக் காண்போம்.

சேரன்செங்குட்டுவன் பேரியாற்றடைகரையில் தங்கி மகிழ்ந்திருந்தகாலை, சாத்தனுர் அவனையும் அவனுடன் இருந்த அவன் மனைவியையும் சந்தித்து அங்குத் தங்கியிருக்கின்ருர். அதுகாலை, மதுரையில் நிகழ்ந்ததையும் கண்ணகியின் வரலாற்றையும் அவர் முன்னதாகக் கூறவில்லை. இச்சமயத்தில் குன்றக்குறவர் கண்ணகியின் பெருமையைச் சொல்வதற் கென்றே, சேர மன்னனைச் சந்திக்கின்றனர். அரசனைச் சந்தித்த அவர்கள்,

"எந்நாட் டாள்கொல் யார்மகள் கொல்லோ
நின்னாட் டியாங்கள் நினைப்பினும் அறியோம்"

என்று கண்ணகியைக் கண்ட செய்தியையும், கண்ணகியின் சிறப்பையும் கூறுகின்றனர். அதன் பின்னரே சாத்தனுர்,

"ஒண்டொடி மாதர்க் குற்றதை யெல்லாம்
திண்டிறல் வேந்தே செப்பக் கேளாய்"

எனப் பாண்டிமாதேவியையும் சேர்த்து இருவர்க்கும் ஏற்பட்ட செயல்களைச் சொல்கிறேன் என்று கூறுகின்றனர். கண்ணகியைப்பற்றிக் குன்றக்குறவர் கூறி "எந்நாட்டவளோ, யார் மகளோ எங்களுக்குத் தெரியவில்லை என்று கூறியபொழுது, கண்ணகியின் செயலைப் பற்றியும் அவளது வரலாற்றைப் பற்றியும் கூறுவதே இயற்கையாகும். சாத்தனுர் அவ்வாறு செய்யவில்லை. மாருகப் பாண்டிமாதேவியையும், கண்ணகியையும் சேர்த்து அவர் இருவரின் பெருமையுடைச் செயலையும் சேர்த்துக் கூறி, பாண்டிமாதேவி உயர்ந்தவளா? கண்ணகி உயர்ந்தவளா? என்ற பெருஞ்சிக்கலை உண்டாக்கிவிடுகின்ருர். இதனுலேயே,சேரன்செங்குட்டுவனுக்கு இவ்விருமகளிருள்எவர் உயர்ந்தவர் என்பதை உணர்வது, கடினமாகிவிடுகின்றது. இக் குழப்பத்தைப் போக்கிக் கொள்ளுவான் வேண்டியே அறிவுசால் தன் மனைவியை நோக்கி,

"உயிருடன் சென்ற ஒருமகள் தன்னினும்
செயிருடன் வந்தவிச் சேயிழை தன்னினும்
நன்னுதல் வியக்கும் நலத்தோர் யார்"

என வினவுகின்ருன். சேரன் செங்குட்டுவனின் மனைவி பேரறிவு படைத்தவள், தெளிவாக உணர்த்தும் ஆற்றல் உடையவள், அதனுல் அவள், இக் குழப்பத்தையே மாற்றி மிகத் திறமுடன்,

**இளங்கோ வேண்மாள் தந்த விளக்கம் :**

> "காதலன் துன்பம் காணாது கழிந்த
> மாதரோ பெருந்திரு வுறுக வானகத்து
> அத்திறம் நிற்கநம் அகல்நாடு அடைந்தஇப்
> பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டும்"

என்று கூறி, குழப்பத்தைப் போக்கித் தெளிவாக்கிக் கண்ணகியை வணங்குதலே கடமையாகும் என்று கூறுகின்றாள். சேரன் செங்குட்டுவனின் மனைவி இவ்வாறு உணர்த்தியிரா விடில், இரு மகளிரில் எவர் உயர்ந்தவர் எவரை வணங்குவது என்னும் குழப்பத்திலேயே இவ் வரலாறு முடிந்திருக்கும் என்பதில் ஐயமில்லை. இவ்வாறு குழப்பத்தை உண்டாக்கியவர் சீத்தலைச் சாத்தனார் என்பது தெளிவாகும். இக் குழப்பம் தெளிவுபடாது இருந்திருப்பின், சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோயில் கட்டியிருக்கமாட்டான் என்பதில் ஐயமில்லை.

**குன்றக்குறவர் செயல் :**

சேரன் செங்குட்டுவனைக் கண்டு, கண்ணகியின் செய்தியைக் கூறிய குன்றக் குறவர், அத்துடன் அமைதி பெறவில்லை. கண்ணகியின் பெருமை, தூய உள்ளம் படைத்த குன்றக் குறவர் தம் உள்ளத்தில், உறுதியாக இடம் பெற்று விட்டமையே இதற்குக் காரணம் ஆகும்.

எனவே அதற்கு ஏற்ற தகுதியுடன் கண்ணகியின் பெருமையை நிலைநாட்டுதற்கேற்ற, திறமையும் உடையவர் இளங்கோவடிகளே என்பது இவர்தம் உறுதியான எண்ண மாகும். கண்ணகியைப் பற்றிய செய்திகளைக் கூறி,

"அஃது அறிந்தருள் நீ" எனக் கட்டளை யிடுவது போன்று குன்றக்குறவர் கூறுகின்றனர். கண்ணகியின் வரலாற்றை "நீ அறிவதோடு, அதனை அருளுதலும் வேண்டும்" என்பதே இவர்தம் வேண்டுகோளாகும். இவர்களே இளங்கோ வடிகளைக் காவியம் எழுதத் தூண்டினர் என்பதற்கு, அவர்தம் சொற்களே சான்றாகும். அங்கும் இளங்கோவடிகளுடன் சீத்தலைச் சாத்தனார் இருக்கின்றார். குன்றக் குறவர் கூறும் வரையில் இங்கும், அவர் கண்ணகியின் வரலாற்றைப்பற்றி இளங்கோவடிகளிடம் ஒன்றும் கூறவில்லை.

(தொடரும்)

# சிந்துவெளி நாகரிகத் தொடர்ச்சி



கச் அருகிலுள்ள பூஞ்ச் பகுதியில்
சிந்துவெளி நாகரிகத்திற்கடுத்த நாகரிகத்தைக்
காட்டும் பகுதிகள்




பூஞ்ச் பகுதியில் கண்டெடுக்கப் பெற்ற
முத்திரைகள்

(படஉதவி. பி. ஐ. பி.)

# கட்சில் அரப்பா குடியிருப்பு

கி. மு. 2000 முதல் 1500 வரையிலான காலத்தில் கட்டப்பட்ட கோட்டை கொத்தளங்களை இந்தியத் தொல்பொருள் துறை முதன் முதலாகக் கண்டுபிடித்துள்ளது. விரிவான வாயில் அமைப்புகளுடன் கூடிய இப் பழங்காலக் கோட்டையின் கண்டுபிடிப்பு இதுவரை இந்தியா கண்டிராத புதிய சாதனையாகும்.

கட்ச் பகுதியில் பூச்சுக்கு வடகிழக்கில் 160 கி. மீ. தொலைவில் சர்கோட்டாடாவில் கோட்டை கொத்தளங்களுடன் கூடிய அரப்பா குடியிருப்புகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவை அரப்பா நாகரிகம் சிந்துச் சமவெளியிலிருந்து குசராத்துக்கு நில வழியாகப் பரவிய முறையைத் தெரிவிப்பதோடு, கட்சில் அவர்களது குடியிருப்பு அமைப்பு பற்றியும், அங்கு அவர்களது வாழ்க்கை முறை தொடர்ந்தவிதம் பற்றியும் தெரிவிககின்றது ஒன்றுடன் ஒன்று இணைந்த தொடர்ச்சியான மூன்று நாகரிகங்களைப் பற்றியும் இவை கூறுகின்றன.

அதற்கு முந்தைய பண்பாட்டுடன் தொடர்பு உள்ள அரப்பா நாகரிக மக்களே இப்போது கண்டுபிடிக்கப்பட்டுள்ள பகுதியில் முதன்முதலாகக் குடியேறியிருக்கின்றனர். தொடக்க முதலே இவர்கள் அரண்கள் அமைத்துத் தங்கியிருக்கின்றனர். இக் குடியிருப்பின் மேற்கே ஒரு கோட்டை கிழக்கில் 'கீழ்நகரம்' ஒன்றும் இருந்திருக்கின்றன. கோட்டை அரணின் அடிப்புற அகலம் சற்றேறக்குறைய 7 மீட்டர். கோட்டைக்குத் தென்புறத்தில் ஒரு வாயிலும், கிழக்கில் குடியிருப்புக்களுடன் தொடர்பு கொள்வதற்கான ஒரு வாயிலும் அமைக்கப்பட்டிருந்தன. கீழ் நகரத்தின் மதில் 3.25 மீட்டர் அகலத்திற்குக் கட்டப்பட்டிருக்கிறது. வீடுகள் பெரும்பாலும் செங்கற்களாலும், பொளியப்படாத கற்களாலும் கட்டப்பட்டிருக்கின்றன. இவை கட்டிட அமைப்பில் மூன்று கட்டங்களைக் காண்பித்தபோதும் சேதமில்லாமல் முழுவீடு ஒன்று கூட இப்போதைய கண்டுபிடிப்புக்களில் இல்லை. இவ்வீடுகளில் இருந்த கழிவுநீர் வெளியேற்றும் அமைப்புகளும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

வண்ணம் பூசப்பட்ட, மற்றும் சாதாரண மட்பாண்டங்கள் இங்குப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. முக்கிய மட்பாண்டத் தொழில் அரப்பா நாகரிக அடிப்படையிலேயே இருந்த போதும், பிற்காலத்தில் பயன்படுத்தப்பட்டவை சிந்துச் சமவெளியிலும் பாரசீகத்தில் கண்டுபிடிக்கப்பட்ட அரப்பா நாகரிகத்திற்கு முந்தைய காலப் பாண்டங்களையே ஒத்திருக்கின்றன.

இக் கண்டுபிடிப்பில் அடங்கியுள்ள பிற சுவையான பொருள்கள்—மாக்கல் சின்னம், மாக்கல் மணிகள் ; மணல், களிமண்ணாலான சிற்பங்கள், செப்பு மோதிரம், ஈட்டிமுனைகள், வண்டிச் சட்டங்கள், சக்கரங்கள், கவண்கற்கள், வண்ண ஓவியங்களைக் கொண்ட மட்பாண்ட சிதைவுகள், ஒடிந்துபோன தந்தச் சீப்பு ஆகியவை. பச்சைக் களிமண்ணாலான லிங்க வடிவங்களும் எரிந்துபோன கயிறு ஒன்றும் கிடைத்துள்ளன.

மற்ற அரப்பா இடிபாடுகளில் காணக்கிடைக்காத குதிரை எலும்புகளும் தற்போதைய கண்டுபிடிப்புகளில் உள்ளன. நகரின் வடமேற்கில் இடுகாடு உள்ளது. கண்டுபிடிப்புகளி லிருந்து இறந்தவர்களைப் பானைகளில் வைத்துப் புதைக்கும் வழக்கமும் இருந்திருக்கிறது என்று தெரிகிறது.

இதற்கு அடுத்த காலம் அதிக வேறுபாடுகள் இன்றி முந்தைய காலத்தின் தொடர்ச்சியாகவே உள்ளது. இங்குக் கண்டுபிடிக்கப்பட்டுள்ள வழக்கமான அரப்பா நாகரிகச் சின்னங்களுடன் 25 × 10 × 1 செ மீ. அளவுள்ள எடை மிகுந்த செப்புக் கோடரி ஒன்றும் உள்ளது.

இதற்கு அடுத்த காலத்திலும் அரப்பா நாகரிகம் மாறுதல் அதிகமின்றித் தொடர்ந்திருக்கிறது. இருந்தபோதும் புதிய மட்பாண்ட வகைகளிலிருந்து ராசஸ்தான் - அகார் பண்பாடு இங்குப் பரவத் தொடங்கியது என்று தெரிகிறது. பளபளப் பான சிவப்பு சௌராட்டிரப் பாத்திரங்கள் இங்குப் பயன் படுத்தப்படவில்லை.

பின்னர், புதியவர்களின் வருகையைத் தொடர்ந்து கோட்டை, புற அரண் கொத்தளங்களின் அமைப்பிலும் வாயிற்புற அமைப்புகளிலும் சிற்சில மாற்றங்கள் ஏற்பட்டன. இங்குக் காணப்படும் முட்டுச் சுவர்களிலிருந்து அரண்கள் அவ்வப்போது பழுதுபார்க்கப்பட்டன என்பது விளங்குகிறது. கோட்டைப் பகுதியில் 9 அறைகளுடன் கூடிய வீடு ஒன்றும், தெருக்கள், சந்துகள் முதலியனவும் கண்டுபிடிக்கப்பட் டுள்ளன. குடியிருப்புப் பகுதிகளில் வீடுகள் ஐந்து அறை களையும், வாயிற்புறத்தில் திண்ணையையும் உடையனவாக இருந்தன.

இக்காலப் பண்பாட்டைக் காட்டும் பொருள்களில் பிடிவைத்த கிண்ணங்களும், கிண்டிகளும், துளையிடப்படாத சாடிகளும், சக்கரம் வைத்த எருதுச் சிலை, அரப்பா முத்திரை, செப்பு உளி, வளையல், மணி ஆகியவை உள்ளன. இவற்றோடு குதிரை, ஒட்டகம், எருது ஆகியவற்றின் எலும்புகளும் கிடைத்துள்ளன.

— —

## இசைத்தட்டில் கழக வெளியீடு
## பிள்ளையார் போற்றி

இறைவனை மனமொன்றி வழிபடத் தாய்மொழியே ஏற்றது; அதனால் தமிழ்மொழியில்தான் தமிழர்கள் தம் இல்லங்களிலும் திருக்கோயில்களிலும் இறைவனைப் போற்றி செய்து பரவல்வேண்டும் என்ற கருத்துடன் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் இற்றைக்குப் பதினெட்டு ஆண்டுகட்கு முன்னர்-1954இல் பிள்ளையார், முருகப்பெருமான், சிவபெருமான், உமையம்மை, அம்பலவாணர், திருமால் ஆகிய கடவுளர் கட்குத் தனித்தனியாக மலர் வழிபாட்டு வரிசை நூல்களை வெளியிட்டது. இதனைத் தமிழ் மக்கள் பல்லாயிரக் கணக்கில் வாங்கிப் பயின்று இறைவனை வழிபட்டு வருகின்றனர்.



சீதாமணி சீனிவாசன்

அண்மையில் தமிழக அரசு திருக்கோயில்களில் தமிழிலும் அருச்சனை செய்தல் வேண்டு மென்று ஆணை பிறப்பித்தது. பல திருக்கோயில்கள் இம் மலர் வழிபாட்டு வரிசை நூல்களைக் கொண்டு அருச்சனை செய்து வருகின்றனர். பொதுமக்களும் அதனை மனத்துட்கொண்டு வழிபாடு செய்யுங்கால் அவர்களும் அதைச் சொல்லி வழிபடுதற்கு ஏற்புடைத்தாகப் பெரிய அளவுத் தாளில் இப் 'போற்றி' வழிபாடுகளைக் கழகம் அச்சிட்டுக் கோயில்கட்கு வழங்கியது.

இம்முறை மென்மேலும் பரவுதற் பொருட்டு இந்தியக் கிராமபோன் நிறுவனத்தார், (Gramaphone coy., of India) இவ் வழிபாட்டு வரிசை நூல்களை இசைத்தட்டு வழியாக வெளிக் கொணரத் திட்டமிட்டுள்ளனர். அத்திட்டத்திற்கிணங்க முதற்கண் 'பிள்ளையார் வழிபாடு' அண்மையில் இசைத்தட்டில் பதிவு செய்யப்பெற்றுள்ளது.

இதனைக் கேட்போருளங்கொள்ளும் வகையில் ஏற்ற இசையமைத்துப் பண்ணினேர் மொழியால் பாடியவர்

திருவாட்டி இசையரசி சீதாமணி சீனிவாசன் அம்மையார் ஆவர். தமிழகத்துத் தொழிற் செல்வர்களுள் குறிப்பிடத் தக்கோரான திரு. வி. சேஷசாயி என்பாரின் ஒரே தவமகளா ராய இவர் செல்வச் சிறப்போடு பிறந்தாராயினும் எண்ணெழுத் திகழாது கற்பன கற்றவர். இளமையிலிருந்தே இசைக் கலையில் அம்மையாரவர்கட்குப் பேரீடுபாடுண்டு. ஆறு வயதிலேயே முறையான இசைப்பயிற்சி பெறத் தொடங்கினர். திருவாளர்கள் ஆர். வி. சுப்பிரமணியம், சாத்தூர் ஏ. ஜி. சுப்பிர மணியம், செம்மங்குடி சீனிவாச ஐயர் போன்ற புகழ்மிக்க கலைஞர்களிடம் இசையினை மிக்க ஆர்வத்துடன் பயின்றார்.

இசையுடன் பாடுவதோடு நின்றுவிடாது இசைக்கலையின் பல நுணுக்கங்களையும் பயின்று அரசினரும் பல அமைப்புக் களும் நடத்தும் பல்வகையான தேர்வுகளில் தேர்ச்சி பெற்றுள் ளார். பன்னிரண்டு வயதில் முதன்முதலாக மேடையேறிய அம்மையார் இன்றுவரை பல இசை மேடைகளில் பாடி வருகின்றார். 1942 முதல் வானொலியிலும் இவர் பாடி வருகின்றனர்.

இவர்தம் பத்திச்சுவை நிறைந்த பல பாடல்கள் இந்தியக் கிராமபோன் நிறுவனத்தாரால் இசைத்தட்டுக்களில் பதிவு செய்யப்பெற்றுப் பெருமளவில் பரவி வருகின்றன. தருமபுர ஆதீனத்தாருக்காக அம்மையார் 'திருவெம்பாவை'யைச் சில ஆண்டுகட்கு முன் இசையுடன் பாடியது பதிவு செய்யப்பெற் றுள்ளது.

இந்தியக் கிராமபோன் நிறுவனத்தார் 'மலர்வழி பாட்டு வரிசை'யில் பிள்ளையாரைப் பற்றிப் பாடுதற்கு இவ்வம்மை யாரையே தேர்ந்தெடுத்துள்ளனர். அதன் எளிமையும் பொருட்செறிவும் அம்மையாருள்ளத்தை மிகமிகக் கவர்ந்தன. பாடுவதை அதன் பொருட்செறிவை நன்குணர்ந்து கருத்தோடு பாடவேண்டுமென்ற எண்ணமுடைய அம்மையார் தமக்கு விளங்காத ஒரிரு பகுதிகளையும் கழகத்தாரிடம் கேட்டுத் தெளிவுபெற்றுச் சுவையோடு பாடியுள்ளார். '108 போற்றி'யும் 13 நிமிடங்களில் அடங்குமாறு இசைத்தட்டில் பதிவு செய்யப் பெற்றுள்ளது. விருத்தம் பாடுவதற்குரிய முறையில் 14 வகை யான இராகங்கள் உள்ளன. அவற்றுள் தெய்வப் பாடல் களைப் பாடுதற்கான தெய்வீக இராகங்கள் ஐந்தனுள் நாட்ட கௌளவும், ஆரபியும், வராளியும் உண்டு என்பதை யாவரும் அறிவர். தெய்வத் திருவீதி உலாப் புறப்பாட்டுத் தொடக்

கத்தில் நாட்ட ராகமே நாதசுரக் குழலிசையினரால் இசைக்கப் பெறும்.

எனவே, இத்துறையில் புகழ்பெற்ற திரு. எஸ். வி. வெங் கட்டராம ஐயர் அவர்கள் பிள்ளையார் போற்றியின் பகுதிகளை ஆழ்ந்து படித்து இடத்திற்கேற்ப இசையமைத்துக் கொடுக்க, அதனைக் கருத்தில் அமைத்து இசையரசி சீதாமணி அம்மையார் அவர்கள் பாடியுள்ளனர்.

இந்த இசைத்தட்டு இவ்வாண்டு 'பிள்ளையார் சதுர்த்தி' யையொட்டிச் சமயப்பற்றுளர் அனைவருக்கும் பயன்படக்கூடிய வகையில் சிறப்பு விழாவொன்றில் வெளியிடப்பெறும். இனி இவ்வரிசையில் கழகம் வெளியிட்டுள்ள 'முருகன்' 'சிவபெரு மான்','உமையம்மை', 'திருமால்' போற்றிகளும் இசைத்தட்டுக் களில் பதிவு செய்யப்பெறும்.

---

## தென்னிந்திய தமிழ்ச்சங்கம், திருநெல்வேலி

### தமிழ்ப்புலவர் மாணவர் தேர்வு

*தமிழகத்திலுள்ள பல புலவர் கல்லூரிகளில் சென்னை, மதுரைப் பல்கலைக் கழக வித்துவான் பட்டத்தேர்வு வகைக்குப் பயின்று வரும் மாணவர்களை ஊக்குவிக்கும் வகையில் ஆண்டுதோறும் இச்சங்கத்தார் நடத்தி வரும் தமிழ்ப்புலவர் மாணவர் தேர்வில் இவ்வாண்டு (1972 மார்ச்சு) நடைபெற்ற தேர்வில் தேர்ச்சி பெற்றவர்கள், பரிசு பெற்றவர்கள் விவரம்.*

### வித்துவான் முதனிலை

*551.* G. *சரோசாமேரி கௌசல்யா,* இளங்கோ *தமிழ்க்கல்லூரி, பாளையங்கோட்டை. முதற்பரிசு ரூ. 40*

*584.* R. *பார்வதி, பல்கலைக்கல்லூரி, தருமபுரம் 2-ம் பரிசு ரூ. 30*

*539.* *தாமோதரன்,* K. V. S. S. *கல்லூரி, திருப்பனந்தாள் 3-ம் பரிசு ரூ. 20*

### வித்துவான் இறுதிநிலை

*318.* M. *பரசுராமன்.* K. V. S. S. *கல்லூரி, திருப்பனந்தாள் முதல் பரிசு ரூ 50*

*338.* D. *வசந்தா.* இளங்கோ *தமிழ்க்கல்லூரி, பாளையங் கோட்டை 2-ம் பரிசு 35*

*401.* *சுப்பிரமணியன். தி. செ. புலவர்கல்லூரி, திருநெல்வேலி. 3-ம் பரிசு ரூ. 25*

குறிப்பு : *மொத்தம் முதனிலைத் தேர்வில் முதல் வகுப்பில் ஒருவரும், 2-வது வகுப்பில் 26 மாணவர்களும், 3-வது வகுப்பில் 32 மாணவர்களும், இறுதிநிலைத்தேர்வில் முதல் வகுப்பில் 2 மாணவர்களும், 2-வது வகுப்பில் 12 மாணவர்களும், 3-வது வகுப்பில் 32 மாணவர்களும் தேர்வு பெற்றுள்ளனர்.*

## சைவப் பெரியார் திரு. சச்சிதானந்தம் பிள்ளை மறைவு

சைவசித்தாந்த மெய்யறிவாளரும், அண்ணுமலைப் பல்கலைக் கழகப் பதிவாளரும், முன்னுள் கல்வித் துறைத் துணை இயக்குநருமான சைவப் பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள், சில நாள் நோய்வாய்ப் பட்டிருந்து 6—7—72இல் தமது 85ஆம் அகவையில் இறைவன் திருவடிப்பேறுற்றனர் என்ற செய்தியறிந்து வருந்துகிறேம். இப்பெரியார் இந்து அறநிலையத்துறை ஆய்வுக் குழுவின் உறுப்பினராகவும், எஸ்.பி.சி.ஏ. கழகம், சைவப் பேரவை ஆகியவற்றின் உறுப்பினராகவுமிருந்தார். இவருக்கு ஐந்து ஆண் மக்களும் மூன்று பெண் மககளும் உள்ளனர். இவர்தம் மறைவு சைவ உலகிற்குப் பேரிழப்பாகும்.



மறைந்த திரு. பிள்ளையவர்களின் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேம். இவர்தம் சீரிய வரலாறு அடுத்த இதழில் வெளியிடப்பெறும்.

## மருத்துவ ஞாயிறு பண்டித எஸ். எஸ். ஆனந்தம் மறைவு

மருத்துவ ஞாயிறு எனப் போற்றப்பெற்றவரும் சித்த மருத்துவத்தில் துறைபோய அறிஞருமான பண்டித எஸ். எஸ். ஆனந்தம் அவர்கள் தமது 97ஆம் அகவையில் 18—6—72இல் இறையடிப் பேறு எய்திய செய்தியறிந்து பெரிதும் வருந்துகிறேம். மறைத்திரு மறைமலையடிகளார்க்கு மருத்துவம் செய்து, அவரால் பாராட்டப் பெற்ற சித்த மருத்துவ ஞாயிறு இவரெனல் ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. மறைந்த மருத்துவ ஞாயிறு அவர்களின் திருமகனுர் டாக்டர் திரு ஆனந்தகுமார் அவர்கட்கும், அவர்தம் குடும்பத்தார்க்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேம். இம் மருத்துவப் பேரறிஞரின் வரலாறு அடுத்த இதழில் வெளியிடப்பெறும்.



# செய்திகளும் குறிப்புக்களும்

## இந்தியில் கடிதமெழுத மைய அரசு கட்டளை

யாரெது கூறினும் இந்தியைத் திணிப்பதே எம் கடன் என்று நடுவணரசு இந்தியைப் படிப்படியாகத் திணித்து வருகின்றது. அண்மையில் அஃது அனுப்பிய சுற்றறிக்கையில் மைய அரசின் கூட்டுச் செயலர்கள் இனிக் கடிதங்களை இந்தியில்தான் எழுதவேண்டும் என்று ஆணை பிறப்பித்துள்ளது. கூட்டுச் செயலர்கள் நிலையில் உள்ள அலுவலர்களுக்கு இதுபோன்ற ஆணை அனுப்பப்படுவது இதுதான் முதன்முறையாகும்.

கூட்டுச் செயலர்கள் பெரும்பாலும் பிற மாநிலங்களிலிருந்து வந்து சிறிது காலம் தங்கிவிட்டு மீண்டும் திரும்பிச் செல்பவர்கள்; இவர்கள் தாங்கள் தங்கப்போகும் சிறிது காலத்துக்காக இனி இந்தி படிக்க வேண்டுமாம். இவர்களில் இந்தி பேசாத பகுதிகளைச் சார்ந்தவர்களும் இருக்கிறார்கள்.

இந்தி தெரியாத கூட்டுச் செயலர்கள் முதலில் இந்தியும் ஆங்கிலமும் கலந்து எழுதலாமாம். ஆனால், ஆங்கிலச்சொற்களை இந்தி வடிவத்தில் எழுத வேண்டுமாம், இல்லையேல் மொழிபெயர்ப்பாளர்களையும் அமர்த்திக் கொள்ளலாமாம். இதற்கான ஒப்புதலை நிதித்துறை வழங்கியுள்ளது. பொது மக்களின் வரிப்பணம் ஒருமொழி மக்களுக்குப் பயன்படப் போகிறது.

இத்தகைய கடிதங்களில் இந்தியின் தரத்தைப் பற்றிக் கவலையில்லையாம். சாதாரணமாகப் பேசுவது போல எழுதினாலே போதுமாம். இதிலிருந்து ஒன்று தெரிகிறது. நடுவணரசுக்கு இந்தி மொழியோ அதன் வளமோ குறியில்லை, இந்தி வரிவடிவில் எது இருந்தாலும் அவர்கட்குப் போதும் போலும்.

## சோதிடம் கூறும் மின் கணக்கான் (Computer)

மனிதனின் எதிர்காலத்தை உணர்த்தும் வகையில் மின்கணக்கானின் திறனை மேற்கு செர்மனியினர் வளர்த்துள்ளனர். ஒருவனுடைய சாதகத்திலிருந்து அவனுடைய எதிர்காலத்தைப்பற்றி மின் கணக்கான் கூறும். ஒருவனுடைய பெயர், பால், பிறந்தநாள், பிறந்தநேரம் இவற்றைமட்டும் தெரிவித்தால் மின்கணக்கான் அவனுடைய எதிர்காலத்தை 120 நொடிகளுக்குள் கூறிவிடும். சோதிடர்கள், உளவியலறிஞர்கள், கணக்கியலறிஞர்கள், மின்பொறியர்கள் முதலியோர் கூடி ஈராண்டுக்காலத்தில் இதற்குரிய திட்டத்தை வகுத்துள்ளனர்.

## மின் கணக்கானின் தவறு

லண்டனில் சில வகையான சிகரெட்டுகளை வாங்குவோருக்குப் பரிசுச்சீட்டு கொடுக்கின்றனர். அவற்றைச் சேர்த்துக் கொடுத்துப் பரிசுப்பொருள்களைப் பெற்றுக்கொள்ளலாம். சோசப் பெக்ளி என்பவர் 2000 சீட்டுக்களை அனுப்பி அதற்குரிய மணிப்பொறியைக் கேட்டார். அது கிடைக்காததால் நிறுவனத்துக்குத் தாம் அனுப்பிய சீட்டுக்கள் என்ன வாயின என்று கேட்டார். உடனே அவருக்கு 3 மணிப்பொறிகள் கிடைத்தன. தமக்குச் சேர வேண்டியது ஒன்றுதான் என்று அவர் எஞ்சிய இரண்டை நிறுவனத்திற்குத் திரும்ப அனுப்பினார். மறுநாளே 10 பொட்டலங்கள் அவருக்கு வந்தன. அதற்கடுத்த நாள் 18 பொட்டலங்கள் வந்தன. மூன்றும் நாள் மேலும் 10 பொட்டலங்கள் வந்துள்ளதாக அஞ்சலகத்திலிருந்து அறிவித்தார்கள். எல்லாமே அவரனுப்பாத சீட்டுக்களுக்குரிய பரிசுப்பொருள்கள்.

அவர் நிறுவனத்திற்கு எழுதி அவற்றையெல்லாம் நிறுத்தச் சொன்னார். மின்கணக்கானின் தவறால் அவ்வாறு நிகழ்ந்து விட்டது. என்று கூறி அவருக்கேற்பட்ட தொல்லைக்கு மாறாக 10000 பரிசுச் சீட்டுக்களை அனுப்பினர் நிறுவனத்தார்.

அவர் 10000 சீட்டுக்களையும் அனுப்பி, சில கருவிகளையும் படுக்கை விரிப்பையும் அனுப்பிவைக்குமாறு கேட்டார். அவருக்குக் கிடைத்ததோ பூந்தொட்டியும் இரண்டு ஏணிகளுமே.

## 'பத்மஸ்ரீ' பட்டம் பற்றிச் சிலம்புச் செல்வர் கருத்து

''பத்மஸ்ரீயைத் தாமரைத் திரு எனத் தமிழ்ப் படுத்துவது சரியா எனச் சிலர் கேட்கின்றனர். அதற்கு என் விடை இதுதான்:

ஒவ்வொரு பிறமொழிச் சொல்லுக்கும் நேர்தமிழ்ச்சொல் வழக்கில் வந்தாகவேண்டும். அங்ஙனம் செய்யாவிட்டால் ஒரு காலத்தில் தமிழ் என்ற ஒரு மொழியே இல்லாமற்போய் விடும்.''

என்று அண்மையில் தமிழ்நாடு சட்டமன்ற மேலவவைத் துணைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற சிலம்புச்செல்வர் ம. பொ. சி. அவர்கள், தமக்களிக்கப்பட்ட பாராட்டுரைகளுக்கு நன்றி தெரிவிக்கு முகத்தான் பேசிய பேச்சுக்களினூடே குறிப்பிட்டார்.

சிலம்புச் செல்வரின் கருத்து நல்ல கருத்துத்தான். ஆனால் தமிழ், தமிழர், தமிழ்நாடு என்னும் பேச்சுக்களுக்கே இடமின்றிச் செய்ய இடைவிடாதுபாடுபடும் ஒரு கூட்டத்தினரின் செவியில் இக்கருத்து ஏறுமா?

## எண்முறை அன்றும் இன்றும்

இன்று ஆங்கில எண்முறை எனக் கருதப்படும் அராபி எண்கள் பழைய தமிழ் எண்களின் உருமாற்றமே என்பது ஆராய்ச்சியாளரின் முடிவு. கீழே காணப்படும் இப்படம் அதனை நன்கு விளக்குவதைக் காணலாம். 2ஆம் பத்தியில் தடிப்பாக உள்ளதே 3ஆம் பத்தியி லுள்ளது.

தமிழ் எண்...குறியீடுகள் TAMIL NUMERALS

இந்து - அராபி எண் குறியீடுகள் Hindu Arabi Numerals

| தமிழ் எண் | | இந்து - அராபி எண் |
|---|---|---|
| க | க | 1 |
| உ | உ | 2 |
| ந | ந | 3 |
| ச | ச | 4 |
| ரு | ரு | 5 |
| சா | சா | 6 |
| எ | எ | 7 |
| அ | அ | 8 |
| கூ | கூ | 9 |
| ய | ய | 10 |

—மதுரை இரா. சண்முகம், பி.ஏ., பி.டி.

## அனைத்திந்திய அரசின் ஆரிய மொழிப்பற்று

சமக்கிருதமொழி வளர்ச்சிக்கு நடுவணரசின் கல்வித்துறை பொரு ளுதவி செய்ய முன்வந்துள்ளது. ஏழ்மை நிலையிலுள்ள சமக்கிருதப் புலவர்கட்குப் பொருளுதவி செய்தல், அரிய சமக்கிருதமொழி நூல்களைத் தொகுத்தல், சமக்கிருதத்தின் தரத்தை உயர்த்துதல், சமக்கிருதமொழி யில் வெளியிடப்படும் நூல்களை விலைக்கு வாங்கி அவற்றைச் சமக்கிருதப் பள்ளி மாணவர்கட்குக் காசின்றி வழங்குதல் ஆகியனவே அத்திட்ட மாகும்.

இத்திட்டத்தின்கீழ் உதவி பெற விழையும் சமக்கிருத மொழிக் கழகங்கள், பள்ளிகள், நிலையங்கள் ஆகியவை நடுவணரசின் கல்வித் துறைக்கு விண்ணப்பங்களை அனுப்பலாம் என நடுவணரசிலிருந்து ஒரு செய்தி கிடைத்துள்ளது.

செத்த வடமொழிக்குச் செல்வாக்குத் தேடும் நடுவணரசின் ஆரிய இனப்பற்றும் மொழிப்பற்றும் கண்ட பிறகேனும் நம்மவர்க்குத் தமிழ் உணர்வும் தன்மான உணர்வும் தோன்றுமா என்பதைப் பொறுத்துப் பார்ப்போம்.

## சிந்துவெளி நாகரிகத்திற்கு முந்திய நாகரிகம்

சிந்துவெளி நாகரிகத்திற்கு முற்பட்ட நாகரிகத்தைக் காட்டும் புதிய இடங்களைப் பாகித்தான் தொல்பொருள் துறையினர் வடக்குப் பலுசித்தானில் கண்டுபிடித்துள்ளனர். 6000 ஆண்டுகட்கு முன் மக்கள் அவ்விடத்தில் வாழ்ந்துள்ளனர். மண்ணால் கட்டப்பெற்ற வீடுகளும் கையால் செய்யப்பெற்ற மட்பாண்டங்களும் ஆராய்ச்சியில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.

## திருவாசக மணியின் இலங்கைப் பயணம்

அனைத்து இலங்கைச் சேக்கிழார் மன்றத்தின் அழைப்பின் பேரில் 17—5—72 இல் இலங்கை சென்ற திருவாசகமணி, கே. எம். பாலசுப்பிரமணியம் அவர்கள் 14 நாட்கள் அந்நாட்டில் தங்கி 13 அரிய சொற்பொழிவுகள் ஆற்றி 31—5—72 இல் தாயகம் திரும்பினர்.

சேக்கிழார் பெருமானின் சீரிய குருபூசை நாளாகிய 18—5—72 முதல் முறையே 'சேக்கிழார் புதுமை' 'சேக்கிழாரின் புலமை' 'திருவாசகம்' என்னும் பொருள்கள் பற்றி மூன்று நாள்கள் அரிய சொற்பொழிவுகள் ஆற்றினர். அவர்தம் சொற்பொழிவினூடே சீர்திருத்தம் பற்றியும், அறிவியலுக்கும் பெரிய புராணத்திற்கு முள்ள தொடர்புகள் பற்றியும் விரிவாக எடுத்துக் கூறினர். ஆடவர், பெண்டிர், மாணவர் உட்பட மூவாயிரம் பேர் குழுமியிருந்து ஆர்வத் தோடு கேட்டு மகிழ்ந்தனர்.

பின்னர்த் திருவாசகமணியவர்கள் கொழும்பு நகரில் ஆறு சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். அவற்றுள் இரண்டு ஆங்கிலச் சொற்பொழிவுகளாகும். அவர் விவேகானந்த சபையின் சார்பில் 'அப்பர் அருளமுதம்' என்னும் பொருள் பற்றி நிகழ்த்திய சொற்பொழிவு மிகச் சிறந்த சொற்பொழிவாகும். சுவாமி விவேகானந்தர் பற்றி 90 நிமிடம் பேசினர். 30—5—72 இல் யாழ்ப் பாணத்தையடுத்த சாவகச்சேரி என்னுமிடத்திலுள்ள மீனாட்சியம்மன் கோவிலில் திருஞானசம்பந்தரைப்பற்றிச் சீரிய சொற்பொழி வாற்றினர்.

நல்லூர் சிவசுப்பிரமணியர், விநாயகர், ஆறுமுகநாவலர், மீனாட்சி யம்மன் முதலிய திருமுன்களில் அருட்கவிகள் பாடினார். திருவருட் செல்வி சரளாதேவி ராஜசுந்தரம், திரு. தீகாந்தா, திரு. தங்கராஜா, முத்துச்சாமி ரெட்டியார், ஈழநாடு ஆசிரியர் திரு. ஹரன் ஆகியோர் திருவாசக மணியின் இலங்கைப் பயணத்திற்கு உறுதுணையாக இருந்தனர்.

# மதிப்புரை

## வண்ணத் தோகை

*[ஆசிரியர் : கவிஞர் கா. வேழவேந்தன், பூங்கொடி பதிப்பகம், 34, வி. எஸ். வி. கோயில் தெரு, மயிலாப்பூர், சென்னை—4 விலை ரூ. 6.00]*

நாடு-மொழி-காதல்-சீர்திருத்தம் முதலியன பற்றிய எழில் மிக்க எண்ணத்தொகையே இவ்'வண்ணத்தோகை'யாக விரிந்து கற்போர்க்குக் களிப்பூட்டும் வண்ணம் அமைந்துள்ளது. இத்தோகையுள் எவ்வண்ணம் ஏற்ற முடைத்து என்று கூற இயலாவண்ணம் ஒன்றை யொன்று போட்டி போடுகின்றன. இவ்வண்ணத்தோகையில் தமிழின் சிறப்பைக் காணலாம்; இந்திஎதிர்ப்பினைக் காணலாம்; இயற்கையின் எழிலைக் காணலாம்; அறிஞர் அண்ணா, மறைமலையடிகள், பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, பாரதியார், நேரு மற்றுமுள்ள முன்னாள் இந்நாள் அறிஞர் பெருமக்களின் மாண்புகளைக் காணலாம். கவிஞர் வேழவேந்தன் பாரதிதாசனார் பாதையில் புதிய நடைபோடுகிறார் என்பதை ஒவ்வொரு கவிதையும் உணர்த்தும். வண்ணத்தோகையின் எழிலையும் ஏற்றத்தையும் காணத் தமிழ் அன்பர்கள் இதனைச் சற்றே விரித்துப் பார்ப்பார்களாக. ஈண்டு விரிப்பின் பெருகும்.

## சிலம்பின் இரண்டாவது ஒலி

(Original Literary Criticism on Cilappathikaram)

*[ஆசிரியர் : டாக்டர் துரை சிங்காரவேலனார், M. A. Ph. D. கிடைக்குமிடம் : சிலம்பு இல்லம், 10—3—156 சரோஜினிதேவி ரோடு, செகந்தராபாத்—26, ஆ. பி. விலை ரூ. 2-50]*

அரைசியல் பிழைத்தோர்க் கறம் கூற்றுவது, உரைசால் பத்தினிக் குயர்ந்தோர் ஏத்தல், ஊழ்வினை உருத்து வந்து ஊட்டல் என்னும் சிலப்பதிகாரத்தின் அடிப்படை நோக்கங்கள் மூன்றனுள், 'உரைசால் பத்தினிக்குயர்ந்தோர் ஏத்தல்' என்னும் இரண்டாம் நோக்கத்தையே சிலம்பின் இரண்டாவது ஒலி' என்னும் தலைப்பில் திறனாய்வு செய்கிறார் இந்நூலாசிரியர். நூல்களுக்குத் திறனாய்வுகள் பெருகுதல் அந்நூலின் மாண்பினை உயர்த்துவதாகும். தக்க அகப் புறச்சான்றுகளோடு சிலப் பதிகாரத்தினைத் திறனாய்வு செய்துவரும் இந்நூலாசிரியரின் முயற்சி

பாராட்டத்தக்கது 'இலக்கிய அன்பர்கள் படித்துப் பயன் பெறுவார் களாக.

## தனித்தமிழும் நாப்பழக்கம்

(1500 சொற்கள் - வழக்காற்றுத் தமிழாக்கம்)

[வெளியீடு : இயற்றமிழ்ப் பதிப்பகம், திருவாரூர். விலை 40 காசு.]

அஞ்சலியல், அரசியல், அலுவலகம், அளவு, இசை, இதழ், உடை - அணி, உணவு-பண்டம், ஊர்கள் - ஊர்திகள், கலை, கல்வித்துறை, காலம், தமிழ்த்திங்கள், ஆங்கிலத்திங்கள் ஒலி பெயர்ப்பு, காவல், குறியீடுகள், சமயம், தொகுதி, நயமன்றம், பொது, பொறியியல், மின்னியல், வாணிகம், விளையாட்டு என்னும் தலைப்புக்களில், நடைமுறையில் உள்ள ஆங்கிலச்சொற்களுக்கு நேர் தமிழாக்கச் சொற்கள் இச்சிறு வெளியீட்டின் மூலம் அனைவரும் அறிந்து கொள்ளும் படி வெளியிட்டிருக்கும் இயற்றமிழ்க் கழகத்தாரின் முயற்சி பாராட்டத் தக்கது. தனித்தமிழ் ஆர்வமுடையோர்க்குப் பயன்படத்தக்க சிறிய ஆனால் அரிய வெளியீடு.

## கிறித்தவத் தமிழ்த் தொண்டர்கள்

[ஆசிரியர் : ரம்போலா மாஸ்கரேனஸ். வெளியிட்டோர் : தமிழ் இலக்கியக் கழகம், திருச்சிராப்பள்ளி-1. விலை : ரூ. 3.00]

கிறித்தவப் பெரியார்கள் பலர் தமிழுக்கு ஆற்றிய தொண்டுகள் மிகப் பல. அத்தகைய அரும்பணிகளைத் தொகுத்துக் காணுமுகத்தான் இந்நூலாசிரியர், மயிலை சீனிவேங்கடசாமி, டாக்டர் சேதுப்பிள்ளை, டாக்டர் கா. மீனாட்சிசுந்தரம் பிள்ளை ஆகியோரின் ஆராய்ச்சி நூல்களின் துணைகொண்டு, தமிழ்த் தொண்டாற்றிய 38 கிறித்தவப் பெரியார்களின் வரலாறுகளை மிகத் தெளிவாகவும் விரிவாகவும் அழகாகவும் எழுதியுள்ளனர். கிறித்தவத் தமிழ்த் தொண்டர்களைப் பற்றிய குறிப்புக்களை ஆங்காங்கே ஒரு சில நூல்கள் கொடுத்திருப்பினும் அவை அனைத்தையும் திரட்டி அவற்றுடன் புதிய செய்திகள் பலவற்றை அரும்பாடுபட்டுத் தேடிக் கொடுத்துள்ள நூலாசிரியர்க்குத் தமிழுலகம் கடமைப்பட்டுள்ளது. இத்தகைய விரிவான முயற்சியை இதுவரை வேறு யாரும் மேற்கொள்ளவில்லை யெனலாம். இத்தகைய அரிய வரலாற்று நூலினை எழுதியதன்மூலம் கிறித்தவத் தமிழ்த் தொண்டர் களின் மாண்பைத் தமிழகம் அறிந்து இன்புறச் செய்திருப்பது பாராட்டத் தக்க ஒரு நற்பணியாகும். இதனைத் தமிழன்பர்கள் வாங்கிப் படித்துக் கிறித்தவத் தமிழ்த் தொண்டர்களால் தமிழ் ஆக்கம் பெற்ற வகை யறிந்து இன்புறுவார்களாக.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ சுப்பையா.

# திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்


1/140, பிராட்வே, சென்னை-1

50-51, மேலமாசி வீதி, மதுரை-1

91, கீழைத்தேர்த் தெரு, திருநெல்வேலி-6

22/819, ரங்கே கவுடர் வீதி, கோயமுத்தூர்-1


## 1972 அனைத்துலகப் புத்தக ஆண்டு

### வீட்டிற்கொரு நூலகத் திட்டம்

1972 ஆம் ஆண்டை அனைத்துலகப் புத்தக ஆண்டாக உலக நாடுகளெல்லாங் கொண்டாடு கின்றன. வீடுதோறும் நூலகம் இருத்தல் வேண்டு மென்று அறிஞர்களெல்லாம் பேசி வருகின்றனர். எனவே வீடுகளில் எளிதிலே நூலகம் அமைப் பதற்குரிய திட்டமொன்றைக் கழகம் அமைக் கின்றது. அத் திட்டத்தைப் பற்றிய விவரக் குறிப்பினை அடுத்த பக்கத்திலே காண்க.

நம் தமிழகத்திலே இரண்டாயிரமாண்டுகட்கு முன்பே பல கலைகளும் நிரம்பியிருந்தன. அக் கலைகளைக்கொண்ட ஓலைச் சுவடிகளிற் பல பாதுகாக்கப்பெருமல் ஒழிந்து போயினவும், பகைவரால் அழிக்கப்பட்டனவும் போக எஞ்சிய ஏடுகளே அச்சுக்கலை தோன்றிய பின் நூல் வடிவம் பெற்றன. இன்னுஞ் சில சுவடிகள் அச்சிடப்பெருமலிருக்கின்றன.

தமிழ்மக்கள் நூல்களை வாங்கிப் போற்ருமையால் அச்சிடப் பெற்ற நூல்களிற் சிலவும் இறந்தொழிந்து வருகின்றன. அவற்றையெல்லாம் திரும்ப அச்சிட வேண்டுமென்பது கழகத்தின் நோக்கமாகும். வீட்டு நூலகத் திட்டத்துக்குத் தமிழ்மக்கள் நல்ல ஆதரவு தருவார்களாஞல் கழக நோக்கம் இனிது நிறைவேறும் என்பது உறுதி.

நம்மவர் இல்லங்கள் பலவற்றில் நாய், புலி போன்ற பொம்மைகளையும் வேறு பல பயனிலாப் பொருள்களையும் பெரு விலைகொடுத்து வாங்கிவைக்கின்றனர். ஆனுல், நம்முந்தையோர் நம் வாழ்வு ஈடேற்றத்தின் பொருட்டு எழுதிவைத்த அறிவுச் செல்வங்களை வாங்கிப் போற்றிப் படிக்கின்ருேமில்லை. அத் தகைய அறிவு நூல்கள் இல்லாவிடில் நம்நாடு கடும்புலி வாழும் காடாகத்தானே இருக்கும்.

திருக்கோயிலில்லாத ஊர் ஊராமோ! அதுபோல நூற் கோயில் (நூலகம்) இல்லாத வீடு வீடாமோ!

நம் வீட்டுத் திருமணங்களில் நகை நட்டுத் துணிமணி கட்கும், விருந்து, இசை முதலியவற்றுக்கும் ஏராளமாகப் பணத்தைச் செலவு செய்கின்றோம். ஆனால் மணமக்களுக்குக் கொடுக்கப்பெறும் விலையுயர்ந்த வரிசைகளில் புத்தகங்கள் இடம் பெறுகின்றனவா என்றால் இல்லை. மேலும் திருமணத் துக்கு வருகிறவர்கட்குத் தேங்காய், பழம், வெற்றிலை பாக்கு ஆகியவற்றைப் ப்ளாஸ்டிக் பையில் இட்டு வழங்குகின்றோம். ஆனால் ஒருவற்கு எழுமையும் பற்றித் தொடர்ந்து உதவும் கருத்தடங்கிய அறிவு நூல்களில் எதையாவது வாங்கி உடன் வழங்குகின்றோமா எனில் இல்லை.

கல்வி 'உலகு நூற்கல்வி', 'அறிவு நூற்கல்வி' என இரண்டு வகைப்படும். உலகு நூற் கல்விக்குரிய நூல்கள் இம்மை வாழ்வுக்கு மட்டுமே பயன்படும். அறிவு நூற் கல்விக் குரிய நூல்கள் இம்மைக்கும் மறுமைக்கும் நன்கு பயன்படும்.

'கற்றது கைம்மண்ணளவு; கல்லாதது உலகளவு,' 'கற்றனைத்தூறும் அறிவு' என்ற மூதறிஞர்களின் பொன் மொழிகளின்படி நாம் படிக்க வேண்டியவை அளவிலடங்கா. படிக்கப் படிக்கத்தான் அறிவு பெருகும். எனவே படிப்பதற்கு நம் இல்லத்திலே கட்டாயம் அறிவு நூல்கள் நிறைந்த நூலகம் இருக்க வேண்டுமன்றோ! வேடிக்கை விநோதக் கதைகளும் புதினங்களும் புலனின்பந் தந்து தீநெறிக்கே செலுத்தும். ஆனால் அறிவு வளர்ச்சிக்குரிய நூல்களோ தீதொரீஇ நன்றின்பாற் செலுத்தும். எனவே நம் மக்களின் நல்வாழ்வின் பொருட்டு அறிவு வளர்ச்சிக்கான பலதுறை நூல்களை வாங்கித் தங்கள் இல்லங்களிலே நூலகம் அமைப் பதற் கேற்பக் கழகம் வகுத்துள்ள திட்டத்துக்குத் தமிழ் மெய் யன்பர்கள் ஒத்துழைப்புத் தரும்படி வேண்டுகிறோம். இச் சீரிய செயல், தந்தை தம் மக்கட்காற்றும் நன்றியுமாகும்.

'கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக',

என்ற பொய்யா மொழியின்படி கற்க வேண்டிய நூல்களை நம் இல்லத்திலே வாங்கி வைத்துக் கற்றுக் கற்றதன்படி நடந்து நம் இல்லத்தை அறம்வளர் கோயிலாக்கிப் புகழ் புண்ணியங் களைப் பெறுமாறு வேண்டிக் கொள்ளுகிறோம்.

வ. சுப்பையா, கழக ஆட்சியாளர்

---

குறிப்பு: இத் திட்டத்தில் சேர விரும்புவோர் அதற்கான விண்ணப்பத்திற்கு எழுதினால் விண்ணப்பத்தாள் (Application Form) அனுப்பப் பெறும்.

# வீட்டுநூலகம் அமைப்பதற்குக் கழகம் வகுத்துள்ள திட்டம் அடியிற்கண்டவாறு

1. ஒரே முறையில் ரூபா நூறு (ரூ.100/-) மட்டுஞ் செலுத்தி இத்திட்டத்தில் உறுப்பினராகலாம்.

2. இப்படிச் செலுத்துகிற தொகையில் பேர்பாதித் தொகை ரூ. 50/-க்குக் கழகம் முன்னமே வெளியிட்டுள்ள நூல்களில் உறுப்பினர்கள் தங்கட்கு விருப்பமானவற்றைப் பெற்றுக்கொள்ளலாம். அவற்றிற்குக் கழகம் வழங்கிவரும் வணிகக் கழிவு 20%க்குமேல் கூடுதலாக $2\frac{1}{2}$% சேர்த்து $22\frac{1}{2}$% கழிவு வழங்கும்.

3. கழகம் நடத்தி வருகிற 'செந்தமிழ்ச் செல்வி' என்னுந் திங்கள் இதழில் 47-ஆம் சிலம்பு 12-9-1972 இல் வெளிவரும். அதற்குரிய ஆண்டுக் கையொப்பம் ரூ. 8/- திட்ட உறுப்பினர்க்கு மட்டும் ரூ. 7/- ஆகும். அதனை எஞ்சிய ரூ.50/-ல் கழித்துக்கொண்டு மீதியுள்ள ரூ. 43/-க்கு உறுப்பினரான நாள் முதல் ஓராண்டுக் காலத்தில் கழகம் வெளியிடுகிற புதிய நூல்கள் அனுப்பி வைக்கப்பெறும். அவற்றிற்கு 25% கழிவு கொடுக்கப்பெறும்.

4. மூன்று தவணைகளாக முதலிற் சேரும்போது ரூபா ஐம்பதும் (ரூ. 50/-) அடுத்து இரண்டு திங்கலில் ரூ. 25/- விழுக்காடு ரூ. 50/- செலுத்தியும் திட்டத்தின் உறுப்பினர்களாகலாம். ஆனால் அவர்கள் உறுப்பினராகச் சேரும்போது ரூபா ஒன்று மட்டும் கூடுதலாகக் காலந்தாழ்ப்பின்பொருட்டுத் தனியே செலுத்துதல் வேண்டும்.

5. இவ்வாறு செலுத்துகிற உறுப்பினர் முதற்கண் ரூ. 25/-க்குக் கழகம் வெளியிட்ட நூல்களை $22\frac{1}{2}$% கழிவுக்கு வாங்கிக்கொள்ளலாம். மீதி ரூ. 25/-ல் செந்தமிழ்ச் செல்விக்கு ரூ. 7/- பிடித்துக்கொண்டு ரூ. 18/- மட்டும் வெளியிடப்பெறும் புதிய நூல்கட்கு நிறுத்தி வைக்கப்பெறும். பின்னுள்ள ரூ. 50/-ல் ரூ. 25/க்கு முன்னமே அச்சிடப்பெற்ற நூல்களும் மீதித் தொகைக்குப் பின்னர் வெளியிடப்பெறும் புதிய நூல்களும் பெற்றுக்கொள்வர். பின்னர் வெளியிடப் பெறும் நூல்கட்கு 25% கழிவு கொடுக்கப்பெறும்.

6. இத் திட்டத்தில் சேருகிறவர்கள் சேர்ந்த கால முதல் 12 மாத காலங்களில் புத்தகங்களைப் பெற்றுக் கொள்ளக்கூடிய முறையில் திட்டம் அமைக்கப் பெற்றுள்ளது.

7. ஒரே முறையில் ரூ. 200/-, ரூ. 300/-, ரூ. 400/-, ரூ. 500/-ம் அதற்கு மேற்பட்ட தொகைகளும் செலுத்திக் கூடுதலான நூல்களை வாங்கி 'வீட்டு நூலகம்' அமைக்க விரும்புபவர்கள் கழகம் பின்னர் வெளியிடும் நூல்கட்கும் 'செந்தமிழ்ச் செல்வி'க்குமாக ரூ. 50/- போக மீதியுள்ள தொகைக்குக் கழகம் முன்னமே வெளியிட்டுள்ள நூல்களை வாங்கிக் கொள்ளலாம். அவற்றிற்கு வணிகக் கழிவு 20% உடன் கூடுதல் கழிவு 5% கொடுக்கப்பெறும்.
8. புத்தகங்களை நேரில் சென்னை, திருநெல்வேலி, மதுரை, கோயமுத்தூர் ஆகிய ஊர்களிலுள்ள கழகப் புத்தக விற்பனை நிலையங்களில் பெற்றுக்கொள்ளலாம். அல்லது புகைவண்டி/சரக்குப் பேருந்து வழியாகவோ பிற ஊர்களிலுள்ளவர்களுக்கு அவர்கள் செலவிலேயே அஞ்சல் வழியாகவோ புத்தகங்கள் அனுப்பிவைக்கப் பெறும்.
9. இத் திட்டத்தின்கீழ் கழக வெளியீடுகளையே உறுப்பினர்கள் பெறமுடியும்.
10. எக்காரணத்தை முன்னிட்டும் செலுத்திய தொகையினைத் திரும்பப்பெற இயலாது.

இது 'வீட்டுநூலகம்' அமைக்க விரும்புபவர்கள் வரவேற்கக்கூடிய சிறந்த திட்டமாகும்.

எனவே தமிழ் மெய்யன்பர் ஒவ்வொருவரும் தாம் இத் திட்டத்திற் சேர்வதோடு தங்கள் நண்பர்களிடமும் எடுத்துச் சொல்லி அவர்களையும் சேர்ப்பித்து இத்திட்டம் வெற்றிபெறச் செய்யும்படி வேண்டிக்கொள்கிறோம்.

உறுப்பினர்கட்கு வழங்கப்பெறும் பரிசு விபரம்

நூறு உறுப்பினர்கள் சேர்ந்தபின் அவர்களுக்குக் கொடுக்கப்பெற்றுள்ள எண்களைக்கொண்ட சீட்டுகள் குடத்திலிட்டு நடுவர் மூவர் முன்பு குலுக்கி எடுக்கப்பெறும். முதற் சீட்டிலுள்ள எண்ணுடையவர்க்கு 25% கழிவு நீக்கி ரூ. 60/- பெறுமான நூல்களும் இரண்டாவது எடுக்கப்பெறும் சீட்டெண்ணுடையவர்க்கு ரூ. 40/- பெறுமான கழக நூல்களும் பரிசாக வழங்கப்பெறும்.

இந்தப்படி ஒவ்வொரு நூறு உறுப்பினர்கள் சேர்ந்ததும் பரிசு வழங்கப்பெறும். தமிழ் வாழ்க! இத் திட்டம் வெல்க!

வ. சுப்பையா

---

குறிப்பு: வீட்டு நூலகத் திட்டத்தின் 7-ஆவது பத்தியிற் கண்டபடி செலுத்தப்பெறுந் தொகையில் பேர்பாதிக்குப் பிற பதிப்பாளரின் புத்தகங்களை வாங்கிக் கொள்ளலாம். கழகத்திற்குக் கிடைக்கப்பெறும் கழிவுக்கேற்ப 5% முதல் 15% வரை கழிவு கொடுக்கப் பெறும்.

பதிவு எண்: M. 4899



அப்பர் அச்சகம், சென்னை-1.